''முந்திய விபத்துக்கள் பற்றி அச்சிடப்பட்ட பிரசுரங்கள் ஏதாவது இருந்தால் அவற்றிலிருந்து பொதுவாக விபத்துக்களின் காரணங்களைத் தெரிந்து கொள்ளலாமே ?'' என்று கேட்டதற்குக் கிடைத்த பதில், ''அந்த கைய பிரசுரிக்கப்பட்ட தஸ்தாவேஜுகள் இங்கே இல்லை'' என்பதுதான்.

பெரம்பூர் விபத்து நடந்த இடத்துக்கு அருகேயே வசித்து, விபத்து ஏற்பட்ட இரண்டு நிமிடங்களுக்கெல்லாம் அங்கு போய்ச் சேர்ந்தவர் ஜோசப் என்ற அன்பர். அவர் கூறுகிறார் :

''பொதுவாக வியாசர்பாடி திருப்பத்தைத் தாண்டியதுமே, மெயில், எக்ஸ்பிரஸ் வண்டிகள் வேகத்தை அதிகப்படுத்தத் தொடங்கி, பெரம்பூரில் நிற்காமல் நல்ல வேகத்தில் ஓடும். வழக்கமான வேகத்தில் அன்று மங்களூர் மெயில் வந்திருந்தால், கொச்சி மெயிலின் ஐந்தாறு பெட்டிகளுக்கு மேல் நொறுங்கியிருக்கும். டிரைவர் சிக்னலை வெகு தாமதமாகப் பார்த்து வேகமாகப் பிரேக்கைப் போட்டிருக்க வேண்டும். முன்னால் இருக்கும் கொச்சி மெயில் புறப்படும் வரை, அதன் பின்னே, மறு வண்டி அந்த லைனில் வருவதற்கான பச்சை விளக்கு எரியாது. அதற்குப் பதில் மஞ்சள் விளக்குத்தான் எரியும். ஆனால் கொச்சின் மெயில் நின்ற இடத்துக்கு முன்னால் இருக்கும் சிக்னல் கொச்சின்மெயிலை அனுமதிக்கப் பச்சை காண்பிக்கும். ஒரு வேளை அந்த முன் பச்சை விளக்கையே பார்த்துக் கொண்டு வந்த மங்களூர் மெயில் டிரைவர் வெகு அருகில் வந்த பிறகுதான் பின்னாலுள்ள தடை செய்யும் மஞ்சள் விளக்கைப் பார்த்திருப்பார். யார் செய்த புண்ணியமோ அவர் வேகத்தை மட்டுப்படுத்தி விட்டார்.''

கடைசிப் பெட்டியில் மூன்றாம் வகுப்புப் பகுதியில் பிரயாணம் செய்த ஓர் ஆசாமி, கொச்சின் மெயில் பெரம்பூரில் வழக்கமில்லாத வழக்கமாக நின்று விட்டதால் பிளாட்பாரத்தில் நின்று சிகரெட் பிடித்துக் கொண்டிருந்தார். அவர், இதே லைனில் பின்னால் மற்றொரு வண்டி வெகு சமீபத்தில் வந்துவிட்டதைக் கவனித்து வண்டிக்குள் இருப்பவர்களைப் பார்த்துக் கத்தினார். இதனால் ஏழு எட்டுப் பேர்கள் மடமடவென்று கீழே குதித்து விட்டார்கள். அதிர்ஷ்டசாலிகள் !

மூன்று முதல் வகுப்புப் பிரயாணிகளுக்கு சென்ட்ரலில் கோயமுத்தூர் கம்பார்ட்மென்ட்டாகிய கடைசிப் பெட்டியில் இடமில்லை. அரக்கோணம் பிரயாணிகளுக்காக ஒதுக்கப்படும் இடம் பூர்த்தியாகாமல் இருந்ததால் அங்கு இடம் கொடுப்பதாக டிக்கட் பரிசோதகர் சொன்னார். ஆகவே, அவர்கள் முன்னால் உள்ள பெட்டிகள் ஒன்றில் ஏறிக் கொண்டார்கள். அதிருஷ்டம் அவர்கள் பக்கத்திலும் இருந்தது.

ஓய்வு பெற்ற ரயில்வே போர்டு அங்கத்தினர் சொல்கிறார் :

''முன்பெல்லாம் எல்லாம் கையாலேயே செய்தார்கள். கவனம் இருந்தது. பயம் இருந்தது. சமீப காலத்தில் எல்லாம் யந்திர மயமாக்கப்பட்டு வருகின்றன. இந்த யந்திர மயம் 'நன்றாகவே செயல்படுகிறது. ஆனால் இதில் சம்பந்தப்பட்ட மனிதர்களின் கவனமும் சிரத்தையும் குறைந்து விடுகின்றன. 'எல்லாம் ஆட்டோமாடிக்தானே!' என்ற நிலையில் கவனக் குறைவு ஏற்பட்டு விடுகிறது.''

அடிக்கடி இந்தப் பகுதியில் ரயில் பிரயாணம் செய்யும் திரு கப்பாரால் கூறுகிறார்:

''ஆட்டோமாடிக் சிக்னல் எப்போதுமே சரியாக இயங்குகின்றது என்று சொல்ல முடியாது. பேசின் பிரிட்ஜிலிருந்து வில்லிவாக்கம் வரை ஒரு பிளாக். ஒவ்வொரு ஸ்டேஷனை விட்டு வண்டி தாண்டியதும், அடுத்த வண்டிக்குத் தானாகவே பச்சை ஒளி வீசும். ஒரு நாள் இரவு, நான் போன வண்டி பெரம்பூர் ஸ்டேஷனை அடையுமுன்பு சிவப்பு ஒளியைப் பார்த்து நின்று விட்டது. ஐந்து நிமிடங்களாகியும் ஒளி மாறாததால் டிரைவர் வண்டியை மெதுவாக விட்டுக் கொண்டு ஸ்டேஷனுக்குப் போனார். அங்கு வேறு வண்டி நிற்கவில்லை. ஏதோ கோளாறு காரணமாக, சிவப்பு ஒளி பச்சையாக மாறவில்லை. இது போல் பல சந்தர்ப்பங்களில் கவனித்திருக்கிறேன். மனிதனுக்குக் கவனக் குறைவு ஏற்படுவது போல யந்திரங்களுக்கும் ஏற்பட்டு விடுகின்றன.''

''கன்ட்ரோல் அறையில் உள்ளவர்கள் ஒவ்வொரு ஸ்டேஷனைக் கூப்பிட்டு, குறிப்பிட்ட எக்ஸ்பிரஸோ, மெயிலோ உங்கள் ஸ்டேஷனைக் கடந்து விட்டதா? என்று கேட்க மாட்டார்கள். அடுத்தடுத்த ஜங்ஷன்களையும், கிராஸிங் ஸ்டேஷன்களையும் கூப்பிட்டுத்தான் கேட்பார்கள். பெரம்பூர் ஸ்டேஷனில் கொச்சி மெயில் நின்றிருப்பது பற்றிப் பெரம்பூர் ஸ்டேஷன் மாஸ்டர்தான் தகவல் கொடுக்கவேண்டும். அன்று சரியானநேரத்தில் இந்தத் தகவல் கொடுக்கப்பட்டதா என்று தெரியவில்லை. மெயில், எக்ஸ்பிரஸ் வண்டிகளைப் பொறுத்த வரை பெரம்பூர் ஒரு சாதாரண கொடி ஸ்டேஷன்தான். மெயில் எக்ஸ்பிரஸ் வண்டிகள் இங்கே நிற்காது'' என்றார் ரயில்வே இஞ்சினீரிங் பிரிவைச் சேர்ந்த ஓர் உத்தியோகஸ்தர்.

எந்த விபத்தையும் திட்ட வட்டமாகத் தடுக்க முடியுமா என்ற கேள்விக்கு முடியும் முடியாது என்ற திட்ட வட்டமான பதில் கிடைப்பது அரிது. மனிதன், இயந்திரம், இயற்கை மூன்றும் ஒரே சுருதியில் இயங்கும் வரை ரயில்களில் பிரயாணம் செய்பவர்கள் அதிர்ஷ்டசாலிகள். இந்த மூன்றில் ஒன்றின் சுருதி பிசகினாலும் ஆபத்துதான் !

அது சரி, ஆனால் டிரைவரே இல்லாமல் ஓடும் இஞ்சின்கள் தயார் செய்திருக்கிறார்கள், மேலை நாடுகளில் ! மணிக்கு நூறு மைல் வேகத்துக்கு மேலாக ஓடும் ரயில் ஜப்பானில் இருக்கிறது. ஆனாலும் அங்கெல்லாம் அபூர்வமாகவே விபத்துக்கள் நடக்கின்றன. ஏன்? நம்மவருக்குப் பொறுப்புணர்ச்சி குறைவா? பயிற்சி முறையில் தவறு? தகுதியற்றவர் ஏதோ ஒருவித சிபாரிசினால் பதவி உயர்வு பெறுவதுதான் காரணமா?

இஞ்சினுக்கு அடுத்த வண்டியில் பிரயாணம் செய்வது ஆபத்து என்று நினைத்த காலம் ஒன்றிருந்தது. இப்போது கடைசிப் பெட்டியில் பிரயாணம் செய்வதும் ஆபத்து என்று நினைக்கும் காலம்! — பட்டினத்தார்

# காதல் பறவைகள்

ஸ்ரீமதி மாலதி ராமச்சந்திரன் வளர்த்து வரும் ஒரு ஜோடிக் காதல்பறவை (Love Birds) நல்ல ஆரோக்கிய முள்ளவையாகக் காணப்படுகின்றன. சாப்பாட்டு அறையில் உள்ள ஒரு பெரிய கூண்டில் இவை பறந்து விளையாடப் போதிய இட வசதி உள்ளது. ஒன்றரை வருடங்களுக்கு முன்பு மூர்மார்க்கெட்டில் பத்து ரூபாய் கொடுத்து வாங்கி வந்தாராம். ''அங்கே இது போன்ற பறவைகளையும் பிராணிகளையும் விற்பனை செய்யும் சூழ்நிலை திருப்தியாக இல்லை. சுமார் நாற்பது நாற்பத்தைந்து பறவைகளை ஒரு சிறிய கூண்டில் அடைத்து வைத்திருக்கிறார்கள். ஒரு ஜோடிப் பறவைகளுக்காவது இந்நெருக்கடி நிலையிலிருந்து விடுதலை அளிக்கலாமே என்று வாங்கி வந்தேன்'' என்கிறார் ஸ்ரீமதி மாலதி.

''அப்போது ஏற்பட்ட இரக்க உணர்ச்சியினால்தான் உங்களுக்குப் பறவை வளர்ப்பதில் ஆர்வம் ஏற்பட்டதா?''

''இல்லை, சிறு வயது முதலே எனக்குப் பிராணிகளிடத்தில் அலாதி அன்பு உண்டு. பெங்களூரில் என் தாத்தா — முன்னாள் மைசூர் ராஜ்ய பிரதம நீதிபதி திரு ஏ. எஸ். ஆர். சாரியின் வீடு ஒரு குட்டி மிருகக் காட்சி சாலையாக விளங்கும். மான்கள், பூனைகள், நாய்கள், கிளிப் பிள்ளைகள் — இப்படிப் பல்வேறு பிராணிகளை என் தாத்தா செல்லமாக வளர்த்து வந்ததால் எனக்கும் அவற்றில் ஈடுபாடு உண்டாயிற்று. ஓய்வு பெற்ற பிறகும் தாத்தா தம் பென்ஷனில் முக்கால் பங்குத் தொகையைப் பிராணி நலனுக்காக உழைக்கும் கழகங்களுக்கு நன்கொடையாக வழங்குகிறார். என் திருமணத்துக்குப் பிறகு என் கணவர், மாமியார் எல்லோருக்குமே வீட்டுப் பிராணிகள், பறவைகளிடம் அன்பு ஏற்பட்டு விட்டது'' என்கிறார், சென்னை அமெரிக்க லைப்ரரியில் பணியாற்றும் ஸ்ரீமதி மாலதி.

இதற்கு முன்பு இவர் வீட்டில் ஒரு சயாம் பூனை ஆறு ஆண்டுகள் இருந்ததாம். அது இறந்த பிறகு அதற்கு வைதிக முறையில் மந்திரங்கள் சொல்லி சமஸ்காரம் நடத்தினார்களாம்.

''பறவைகளுக்கென மாதம் எவ்வளவு செலவாகும்?''

''மூன்று, நான்கு ரூபாய்களுக்கு மேல் ஆகாது. ஒரு படி தினை வாங்கினால் போதும். படி ஒன்றரை ரூபாய் விலையாகும். தினமும் காலையில் ஒரு பாத்திரத்தில் சிறிதளவு தினை மணிகளையும் ஒரு தட்டில் மணலையும் போட்டு வைத்தால்போதும். காலையில் எட்டு,ஒன்பது மணியளவில் அவை புசிக்கும்.''

''மணல் எதற்காக?''

''உணவு ஜீரணமாவதற்காக.அவை தானியங்களுடன் இதையும் கொத்தித் தின்னும். பறவைகள் வசிக்கும் கூண்டைத் தினமும் தவறாமல், கழுவிச் சுத்தம் செய்ய வேண்டும். அவை பருகுவதற்கும் அன்றாடம் புதிதாக நீர் வைக்க வேண்டும். பழைய தண்ணீரைக் கொட்டிவிட்டுப் புதிய நீர் வைத்தால் பறவைகளுக்கு வியாதி வராமல் தடுக்கலாம். அவ்வப்பொழுது மிளகாய்ப் பழம், வேறு ஏதாவது பழங்களும் பறவைகளுக்கு அளிக்கலாம். பறவைகளைப் பூனை, நாய்களிடமிருந்து காப்பாற்றப் போதுமான வலுவுள்ள கூண்டு அவசியம். இந்தக் கூண்டுக்காக அறுபது ரூபாய் செலவாயிற்று.''

''இப் பறவைகளைக் குளிப்பாட்ட வேண்டுமா?''

''ஒரு பெரிய பாத்திரத்தில் நீர் வைத்தால் அவை விரும்பியபோது குளிக்கும். வலுக் கட்டாயப்படுத்திக் குளிப்பாட்டுவது சரியன்று.''

''இப் பறவைகளுக்கு விடுதலையில் மோகம் இல்லையா?''

''இல்லை, இவற்றைக் கூண்டைத் திறந்து வெளியே விட்டால்கூட, மற்றப் பறவைகளைப்போல் சுதந்திரமாகப் பறந்து உயிர் வாழத் தெரியவில்லை. அநேகமாகக் காக்கைகள் இவற்றைக் கொன்று விடுகின்றன. காக்கைகளுக்குப் பலி கொடுப்பதைவிடக் கூண்டில் வைத்து உயிர் வாழச் செய்வது மேல் இல்லையா?'' என்று கேட்கிறார் ஸ்ரீமதி மாலதி.

குட்டிக் கிளிகள் போன்று விளங்கும் இவற்றைப் பாடவும் பழக்க முடியுமாம்.

பேட்டி : பாணன்








சீதா பரவசமானாள். ''அப்பனே! நான்தான் சீதை. விதேஹராஜனுடைய புத்திரி. ராமசந்திரனுடைய பாரியை. பன்னிரண்டு வருடங்கள் சகல சுகங்களையும் அவனுடன் அயோத்தியில் அனுபவித்தேன். பதின்மூன்றாம் வருஷம் சக்கரவர்த்தியானவர் அவருடைய மூத்த குமாரனாகிய என் ராமனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய எல்லா ஏற்பாடுகளும் செய்தார். அப்போது மகாராஜாவினுடைய இளையதேவி கைகேயி தன் மகனுக்குப் பட்டம் கொடுக்கவேண்டும்; ராமனைக் காட்டுக்கு அனுப்பிவிட வேண்டும்; இல்லாவிடில் உணவு உண்ண மாட்டேன். தண்ணீர் அருந்த மாட்டேன். உயிரை விடுவேன் என்று ஹதம் செய்து வற்புறுத்தினாள். முந்தி கைகேயிக்குக் கொடுத்திருந்த வாக்குப்படி அரசன் அவள் பிடிவாதம் பண்ணிக் கேட்டதற்கு ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. மகாராஜன் ராஜ்யத்தைப் பரதனுக்குக் கொடுத்துவிடு என்று ராமனைக் கேட்டுக் கொண்டார். ராமன் ஒரு க்ஷணமும் தாமதிக்கவில்லை. 'தகப்பனார் தந்த வார்த்தையைச் சத்தியமாக்குவதே என் பாக்கியம். ராஜ்ய போகத்தை விடத் தந்தையைச் சத்திய சந்தனாக்குவதே என் ஆசை. என் சந்தோஷம்' என்று ராஜ்யத்தைப் பற்றிய எண்ணத்தை உடனே முற்றிலும் துறந்துவிட்டு வனம் சென்றார். புருஷன் வனம் சென்றால் நான் பிரிந்திருக்க முடியாது, நானும் கூடவே வனம் செல்வேன் என்று வற்புறுத்தினேன். முந்தியே தம்பி லக்ஷ்மணன் மரவுரி தரித்து அண்ணனுக்குத் துணையாக வனம் போக நிச்சயித்து விட்டிருந்தான். மூவரும் வனம் சென்றோம். தண்டகாரண்யத்தில் வசித்து வந்தோம். ஒரு நாள் துராத்மாவான ராவணன் என்னைப் பலாத்காரமாகத் தூக்கி வந்து இவ்விடம் இந்த அசோக வனத்தில் சிறை வைத்திருக்கிறான். பன்னிரண்டு மாத கால வரையறை வைத்திருக்கிறான். இன்னும் இரண்டு மாத காலம் மிகுதி இருக்கிறது. அது முடிந்தவுடன் என் உயிரை நீப்பேன்'' என்றாள் துக்கத்துக்கு மேல் துக்கமாக வந்து திக்கற்று நின்ற பிராட்டி.

இவ்வாறு ஹனுமான் சொன்னதும் ஜானகி சொன்னதும் இரண்டு சிறிய அத்தியாயங்களில் ராமாயணத்தில் பாடப்பட்டிருக்கிறது. பெரிய கதையை ஆஞ்சநேயனுடைய வாயாலும் ஜானகியின் வாய்மொழியாலும் வால்மீகி முனிவர் தந்திருக்கிறார். உலகத்தை அளந்த திரிவிக்கிரமன் பலியினிடம் வாமன வடிவம் எடுத்துச் சென்றது போல் அழகிய சிறிய உருவத்தில் தந்திருக்கிறார். ஆஞ்சனேயனும் பிராட்டியுமே நமக்கு ராமாயணம் சொல்லுகிறார்கள். நமக்கு வேறு என்ன பாக்கியம் வேண்டும்? ஹனுமான் சொன்ன இந்த ராம கதையை, ஜானகி சொன்ன இந்த ராம கதையைப் பக்தியோடு படித்து வாமனன் மகாபலிச் சக்கரவர்த்தியை வசப்படுத்தி அவன் அகங்காரத்தினின்று அவனைக் காத்ததுபோல் நம்முடைய அகங்காரங்களினின்றும் மமகாரங்களினின்றும் நாமும் காக்கப்படுவோமாக.

"பன்னிரண்டு மாதத் தவணையில் இரண்டு மாத காலம் மிஞ்சி யிருக்கிறது. அது முடிந்ததும் என் உயிரும் முடிவடையும்" என்று சீதை தன் கதையைச் சொல்லி முடித்தாள்.

துக்கத்தில் மூழ்கி இப்படிப் பேசிய சீதைக்கு ஹனுமான் ஆறுதல் தரும்படியான வார்த்தைகள் சொன்னான்:

"வைதேஹி! உத்தமர்களுக்குள் உத்தமன், வீரர்களுக்குள் வீரனான ராமன் சக்கரவர்த்தித் திருமகன் உமக்கு க்ஷேமத்தைச் சொல்லி யனுப்பியிருக்கிறான். அவன் அன்புக்குப் பாத்திரமான தம்பி, உம்முடைய நிலையை நினைத்து நினைத்து இடைவிடாமல் துயரப்பட்டுக்கொண்டிருக்கும் லக்ஷ்மணனும் தன்னுடைய வணக்கத்தைச் சொல்லச் சொல்லி என்னை அனுப்பி யிருக்கிறான்" என்றான்.

ராம லக்ஷ்மணர்களுடைய பெயர்களையும் அவர்கள் சொல்லி யனுப்பிய நற்செய்தியையும் கேட்ட சீதையினுடைய உள்ளம் மகிழ்ச்சியால் பொங்கிற்று.

"ஆகா! என்ன சந்தோஷம் அடைந்தேன்! உயிரை வைத்திருந்தால் என்றைக்காவது நன்மையை அடையலாம்; விட்டுவிட்டால் அது இல்லை என்று பாமர ஜனங்கள் சொல்வதின் உண்மையை இப்போது உணர்ந்தேன்" என்றாள் சீதை.

திடீர் என்று முன்பின் அறியாத இருவருக்கும் அற்புதமான நம்பிக்கையும் பிரீதியும் உண்டாயின. ஹனுமான், தன்னுடைய ஆனந்த பரவசத்தாலும் அவளுடைய துக்கத்தை எப்படியாவது தீர்த்துத் தைரியம் உண்டாக்க வேண்டும் என்கிற கருத்தைக் கொண்டும், சீதைக்குப் பக்கமாக அணுகி நின்றான்.

திடீரென்று சீதை மறுபடியும் பயந்து போனாள். ஹனுமானுடைய சொற்களைக் கேட்டு உண்டான நம்பிக்கையை இழந்து சந்தேகத்தால் மறுபடியும் பீடிக்கப்பட்டாள். மரக்கிளை மேல் சாய்ந்திருந்தவள் அதை விட்டு விட்டுக் கண்களை மூடிக் கொண்டு விலகி உட்கார்ந்தாள். ஹனுமான் இதைக் கண்டு மிக விநயமாகக் கைகூப்பிய வண்ணம் நின்றான்.

"நான் ஏமாந்தேன். நீ ராவணனே! முன் சந்நியாசி வேஷம் பூண்டு வந்து வஞ்சித்தாய். இப்போது மற்றொரு வேஷம் பூண்டு வந்து ஏதோ பேசுகிறாய். இதுவெல்லாம் உனக்கு நன்மையல்ல. இப்படி என்னை வருத்தாதே, ராவணா! துக்கத்தில் மூழ்கி அன்ன ஆகாரம் இன்றி இருக்கும் என்னை மாயங்கள் செய்து தொந்தரவு செய்யாதே! உனக்கு இது நல்லதல்ல. விலகிப் போ!" என்றாள் ஜானகி.

பிறகு மறுபடியும் யோசிக்கலானாள்: 'இல்லை, இல்லை. இவனைப் பார்த்தால் எனக்கு அடக்க முடியாத பிரீதியும் நம்பிக்கையும் உள்ளத்தில் உண்டாகின்றன. இவன் பகைவனாக இருக்க முடியாது. இவனை நான் சந்தேகித்தல் தகாது.' இவ்வாறு யோசித்து, "வானரமே! உண்மையில் நீ ராமனிடமிருந்து வந்த தூதனா? உனக்கு மங்களம் ஆகுக! ராமனைப் பற்றிச் சொல்லுவாய். நான் உள்ளம் குளிரக் கேட்கிறேன்!" என்றாள்.

உடனே மீண்டும் சந்தேகத்தில் மூழ்கினாள். 'பிரமை பிடித்து இப்படி நற்செய்தி வந்ததாக எண்ணுகிறேனா? கனவா? மகிழ்ச்சி தரும் இந்தக் கனவைக் காண்கிறேன். இந்தக் கனவு தீர்ந்து போகுமா? எனக்கு ஆசை காட்டித் துயரம் உண்டாக்குவதற்கே இப்படிக் கனவு வந்திருக்கிறதா? சித்தப் பிரமையால் இப்படியெல்லாம் காண்கிறேனா? இல்லை, சரியாகத்தானே எல்லாம் எண்ணி யோசித்து உணர்ந்து பேசி வருகிறேன். பிரமை பிடித்த நிலையில் இல்லை. நல்ல நினைவில்தான் இருக்கிறேன். ஆனால், நூறு யோசனைக் கடலைத் தாண்டிவிட்டு இங்கே வந்தேன் என்கிறான் இவன். இது உண்மையாயிருக்க முடியாது. இவன் ராவணனே!' என்று மனத்தில் தீர்மானித்துக் கொண்டு ஹனுமானைக் கண்ணெடுத்தும் பார்க்காமல் மௌனமாக உட்கார்ந்திருந்தாள்.

ஹனுமான் சீதையின் பயத்தையும் சந்தேகத்தையும் உணர்ந்தான். அரக்கனால் வஞ்சிக்கப்பட்டவள் இப்படிப் பயப்படுவதும் சந்தேகப்படுவதும் இயற்கையே என்று கண்டான். என்ன செய்வது என்று யோசித்து உடனே தீர்மானித்தான். 'இவளுடைய உள்ளத்தில் மகிழ்ச்சியும் நம்பிக்கையும் உண்டாக்க வேண்டும். ராமனுடைய நற்குணங்களை எடுத்து இவள் காதில் படும்படியாகத் துதிப்பேன். அந்த இனிய மொழிகள் தாமாகவே இவளுடைய பயத்தையும் சந்தேகத்தையும் போக்கும்' என்று எண்ணிப் பேசலானான்.

"சூரியனுடைய தேஜஸ் பெற்ற ராமன், குளிர்ந்த சந்திர தரிசன இன்பத்தை மக்களுக்குத் தன் தரிசனத்தால் கொடுக்கும் ராமன், பூமியை ஆளும் அரசர்கள் அனைவரும் குபேரனைப் போல் மதிக்கும் ராமன், மகா விஷ்ணுவைப்போல் பராக்கிரமம் பெற்ற ராமன், பிருகஸ்பதிக்குச் சமமான அறிவும் மன்மதனைப் போன்ற அழகும் கொண்ட ராமன், உண்மையும், மதுரமும் கலந்த பேச்சை எப்போதும் பேசும் ராமன், நியாயமும், இடமும் பார்த்தே கோபம் கொள்ளும் நிகரற்ற வீரன் ராமன் அனுப்பிய தூதன் நான். அரக்கனை மானாகக்காட்டி வஞ்சித்து உம்மைத்

தனிமைப்படுத்திவிட்டு, அந்தச் சமயத்தில் பலாத்காரமாக உம்மை ராவணன் பிடித்து எடுத்து வந்து விட்டான். இந்த அக்கிரமத்தின் பயனை ராவணன் சீக்கிரம் அடைவான். அதை உம் கண்களால் பார்ப்பீர். சீக்கிரத்தில் ராம லக்ஷ்மணர்களுடைய பாணங்கள் பாய்ந்து வந்து லங்கையை எரிக்கப் போகின்றன. அரக்கர்கள் கூட்டத்தையும் ராவணனையும் அழித்து நிர்மூலம் செய்வதைக் காண்பீர். ராமனால் அனுப்பப்பட்டு உம்மிடம் வந்திருக்கிறேன். உம்முடைய க்ஷேமத்தைத் தெரிந்து கொண்டு போக வந்திருக்கிறேன். உம்முடைய க்ஷேமத்தையும் ராமசந்திரனுக்காக நான் வணக்கமாக விசாரிக்கிறேன். லக்ஷ்மணனுக்காக அவன் வணக்கத்தை உமக்குச் செலுத்துகிறேன். வானர ராஜன் சுக்ரீவனுக்காக உமக்கு வணக்கம் செலுத்துகிறேன். ராம லக்ஷ்மண சுக்ரீவர்கள் இடைவிடாமல் உம்முடைய நினைவாக இருக்கிறார்கள். உயிருடன் நீர் இருப்பதைப் பார்த்தது என்னுடைய பாக்கியம். இனித் தாமதமில்லை. சீக்கிரத்தில் ராமனும் லக்ஷ்மணனும் சுக்ரீவனும் வானர சேனையும் லங்கையில் வந்து இறங்குவார்கள். சுக்ரீவனுடைய அமைச்சன் நான். ஹனுமான் என்பது என் பெயர். கடலைத் தாண்டிக் குதித்து லங்காபுரியில் இறங்கியிருக்கிறேன். துராத்மாவான ராவணனுடைய தலைமேல் என் காலை வைத்தேன் என்று எண்ணுவீராக. என் பராக்கிரமத்தால் கடலைத் தாண்டி உம்மைப் பார்க்க வந்த ராம தூதன் நான். என்னைச் சந்தேகிக்க வேண்டாம். தேவி, என் வார்த்தையை நம்புவீராக'' என்று ஹனுமான் கண்களில் நீர் ததும்பச் சொன்னான்.

இப்படி ஹனுமான் பேசிய இனிய மொழிகள் சீதையின் பயத்தைக் கரைத்து விட்டன. தைரியமும் நம்பிக்கையும் கொண்டாள்.

''வானரனே! நான் சந்தேகித்ததைக் கண்டு நீ வருத்தமடையக் கூடாது. வஞ்சக அரக்கர்களால் மோசம் செய்யப்பட்ட நான் இப்படிப் பயப்படுகிறேன். ராமனிடமிருந்து வந்த நண்பனே! நீ எப்படி ராமனைச் சந்தித்தாய்? ராஜ குமாரனான ராமன் வானரர்களை எப்படி நட்புக் கொண்டான்? இந்தச் சரித்திரத்தை விவரமாகச் சொல்லுவாய்'' என்றாள்.

மறுபடியும் ஹனுமான் அவளுடைய நம்பிக்கையை ஊர்ஜிதம் செய்ய ராம லக்ஷ்மணர்களுடைய குண விசேஷங்களையும் சீலத்தையும் ரூப லக்ஷண சம்பத்தையும் வர்ணித்தான். ''உலகத்தையெல்லாம் தன் அன்பினால் ஆட்கொள்ளும் ராமன் என்னையும் என் அரசன் முதலான வானரர்களையும் வசிகரித்ததில் என்ன வியப்பு?'' என்றான்.

பிறகு விஸ்தாரமாக நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் அவளுக்கு எடுத்துச் சொன்னான். வாலிக்கும் சுக்ரீவனுக்கும் இருந்த பகை, எவ்வாறு ராம லக்ஷ்மணர்களை முதலில் சுக்ரீவன் சந்தித்தான், அவர்கள் எப்படி நண்பர்களானார்கள், வாலியை வதம் செய்து அவனுக்கு வானர ராஜ்யம் சம்பாதித்துத் தருவதாக ராமன் வாக்களித்தது, சீதை கீழே போட்ட ஆபரணங்களை வானரர்கள் எடுத்து வைத்திருந்தது, ராமனுக்கு அவற்றைக் காட்டியது, அவற்றைக் கண்டதும் அவனுடைய துக்கம் இரு மடங்கானது, சுக்ரீவனுடைய பட்டாபிஷேகம், மழைக்காலம் முடிந்ததும் வானரப் படை பூமண்டலம் முழுவதும் தேடிப் போனது, தெற்கே சென்ற அங்கதன் முதலானோர் சீதையைக் காணாமல் பிராயோபவேசம் செய்யத் தீர்மானித்தது, சம்பாதியைக் கண்டு, அவனிடம் உறுதியான துப்பு அடைந்தது, அதன் பின் தான் கடலைத் தாண்டி வந்தது, தான் ராவணனுடைய அந்தப்புரமெல்லாம் தேடியது, இவை எல்லாவற்றையும் சொன்னான். எல்லா நிகழ்ச்சிகளையும் சொல்லிவிட்டு, தான் கொண்டு வந்திருந்த கணையாழியையும் அவளுக்குத் தந்தான். (தொடரும்)

விளங்கும் விஞ்ஞானம்

# கரும்பு கசக்குமா?

கரும்பு கசக்கும் என்றுசொன்னால் பித்தன் என்பார்கள். ஆனால் உலகிலேயே மிக மிகக் கசப்பான பொருள் என்று சமீப காலம்வரை கருதப்பட்டு வந்த ஸுக்ரோஸ் ஆக்டா அஸிடேட் சர்க்கரையிலிருந்துதான் தயாரிக்கப்படுகிறது! இதுவும் ஸ்டிரிக்னின் என்னும் மருந்துப் பொருளும்தான் ரொம்பக் கசப்பு என்று எண்ணி வந்தார்கள். ஆனால் சில ஆண்டுகளுக்கு முன்னால் பிரிட்டனில் ஒரு ரசாயனஆராய்ச்சியாளர் (2,6 க்ஸைலைல் கார்பமாயில் மிதைல்) அமோனியம் பென்ஸோயேட் என்ற பொருளைப் பரிசோதனைச் சாலையில் உருவாக்கினார். இதை ஓர் அவுன்ஸ் எடுத்துக்கொண்டு அத்துடன் நாலு கோடி அவுன்ஸ் நீரைக் கலந்தாலும் அப்போதும் கசப்புத் தெரியும்! இந்த விவரம் பின்னால்தான் புரிந்தது அந்த விஞ்ஞானிக்கு. பாவம்! ஒரு துளியை அவர் வழக்கம்போல் நாக்கில் வைத்துப் பார்த்தார்; பட்ட இடம் உணர்ச்சியற்று மரத்துப் போகிறதா என்று பரிசோதிக்க! அப்புறம் அவர் பட்ட வேதனையை நாம் எளிதில் ஊகிக்கலாம்தானே?

முதலில் தித்திப்பாகவும் பிறகு கசப்பாகவும் இரு விதமாகவும் ருசிக்கக் கூடிய படைப்பும் இறைவன் சிருஷ்டியில் உள்ளது. கசப்பு இனிப்புச் செடி என்றே இதற்குப் பெயர். **(Bitter Sweet Plant)** இதிலிருந்து டல்காமரின் என்ற பொருளை எடுக்கிறார்கள்.

இதேபோல் 'எப்ஸம்' உப்புக்கு இரண்டு வித ருசிகள். நாக்கு நுனியில் கரிக்கும்; விழுங்கும்போது கசக்கும்.



நல்ல ஜலதோஷம் பிடித்திருக்கும்போது வெங்காயத்தைச் சாப்பிட்டுப் பாருங்கள். சுவையே தெரியாது. இதிலிருந்து, ருசி என்று நாம் நினைக்கும்போது உண்மையில் பல பொருள்களின் வாசனையையே நாம் நுகர்கிறோம் என்பது தெளிவாகிறது. நிதர்சனமாக நாம் அனுபவிக்கக் கூடிய ருசிகள் நான்கே. இனிப்பு, கரிப்பு, புளிப்பு, கசப்பு ஆகியவை.

நாக்கில் ருசிகளை உணரக்கூடிய மொட்டுக்கள் உள்ளன. நான்கு வித ருசிகளை உணரக்கூடிய நான்கு வகை ருசி மொட்டுகள். இவையெல்லாம் நாக்கு முழுவதும் பரவலாக இல்லை. இனிப்பினை நாக்கின் நுனியில் நன்கு உணரலாம். கரிப்பும் அவ்வாறே. புளிப்பு ருசியை நாக்கின் பக்கவாட்டில் உள்ள மொட்டுக்கள் உணர்த்துகின்றன. நாக்கின் அடிவாரமே கசப்பை உணரும். இதனால்தான் ஒரே பொருளுக்குள்ள இருவித ருசிகளையும் நாம் அறிதல் சாத்தியமாகிறது.

புளிப்பைத் துல்லியமாக நாம் உணரலாம். இந்த ருசியை உண்டாக்குவது அமிலங்களே; அமிலங்கள் மட்டுமே. சமையலுக்குப் பயன்படும் சாதாரண உப்பு கரிக்கும்; ஆனால் மற்ற எல்லாவித உப்புக்களுக்கும் கரிப்பு மட்டுமின்றிக் கசப்பு ருசியும் ஓரளவோ மிகுதியாகவோ உண்டு.

சர்க்கரையில் பல ரகம் உண்டு. பழத்திலிருந்து எடுக்கப்படும் சர்க்கரை, கரும்புச் சர்க்கரையை விட இரண்டு மடங்கு இனிப்புடையது. பாலிலிருந்து கிடைக்கும் சர்க்கரையைக் காட்டிலும் பன்னிரண்டு மடங்கு அதிகமான இனிப்புடையது பழச் சர்க்கரை.

செயற்கையாகத் தயாரிக்கப்படும் பல பொருள்களுக்கு இனிப்பு ருசி உண்டு. இந்தச் செயற்கைப் பொருள்களுக்கும் சர்க்கரைக்கும் ரசாயன ரீதியில் நோக்கினாலும் சம்பந்தமே கிடையாது. சர்க்கரையைப் போல் போஷாக்கு அளிக்கக்கூடியவையும் அல்ல.

இவற்றில் ஸாக்கரின், சர்க்கரையைப்போல் நானூறு அல்லது ஐந்நூறு மடங்கு அதிக இனிப்புடையது; ஸைக்ளமேட்ஸ் என்ற ஒரு வகை ரசாயனப் பொருள் முப்பத்தைந்து மடங்கு அதிக இனிப்புடையது. சர்க்கரைக்குப் பதில் இதைப் பல தயாரிப்புக்களில் பயன்படுத்தி வந்தனர். சமீபத்தில் இது தேகத்துக்கு ஊறு விளைவிக்கும் என்று பயந்து தடை விதித்தனர். ஆனால் இந்தப் பயம் ஆதாரமற்றது.

இதைவிடத் தித்திப்பான பொருள்களையும் ரசாயன விஞ்ஞானி அறிவான். சர்க்கரையை விட மூவாயிரம் மடங்கு அதிக இனிப்பான ஒரு பொருள்கூட உண்டு. ஆனால் துரதிர்ஷ்டவசமாக — ஒருவேளை அதிர்ஷ்டவசமாகக்கூட இருக்கலாம் — அது மிகவும் விஷத் தன்மை கொண்டது!

—மைக்கேல் ஆர்னல்டு

# சிதம்பர ரகசியம்


கதை : கோமதிசுவாமிநாதன்

சித்திரம் : ராஜு


17

















# ஒவ்வொருவரின் மேனிக்கும் பாதுகாப்பு தேவை




வியர்வை துர்நாற்றத்திருந்தும், அதனால் நுண்ணிய கிருமிகளிடமிருந்தும் உங்களுக்கும், மற்றவர்களுக்கும் ஏற்படும் சங்கடத்திலிருந்தும் பாதுகாப் பளிக்கிறது. ஜி-11 (ஹெக்ஸாக்ளோரோஃபீன்) கலந்த **சிந்தால் டாய்லெட் பவுடர்** இந்தப் பாதுகாப்பைத் தருகிறது. அதோடு... அன்றலர்ந்த மலரின் நறுமணத்தையும் தருகிறது.

**சிந்தால்—**
**துர்நாற்றத்தை அறவே போக்கிப் பாதுகாப்பளிக்கும் டாய்லெட் பவுடர்.**

Interpub/GP/5 Tam

## நாடக மேடை

குழந்தைகளைப் பார்த்து, "நீ அப்பா செல்லமா? அம்மா செல்லமா?" என்று கேட்பது வழக்கம். பெற்றோர் வளர்க்கும் விதத்தைப் பொறுத்துத்தான் பிள்ளைகளின் எதிர்காலம் அமையும் என்பது யாவரும் அறிந்ததே. இந்த இயற்கை நியதிகளுடன் விதி மோதியபோது உருவானதுதான் பாச தீபம் என்ற நாடகம்.

காரைக்குடி நாராயணன் எழுதிய இந்த நல்ல நாடகத்தில் இயல்பான, அழுத்தமான சம்பவங்களும், சுவையான எதிர்பாராத திருப்பங்களும் பின்னிப் பிணைந்து நிமிஷங்களை விநாடிகளாக ஓட வைக்கின்றன. கனமான கதாபாத்திரங்களைக் கன ஜோராகக் கையாண்டு அனுபவப்பட்ட நடிகர் திரு ஏ.வி.எம். ராஜன். குடும்பத் தலைவர் சந்திரனாகத் தோன்றும் இவரது நடிப்பு பிற்பகுதியிலும் குடும்பத்தலைவி லக்ஷ்மியாக வரும் ஸ்ரீமதி புஷ்பலதாவின் நடிப்பு முற்பகுதியிலும் அதிகமாகச் சோபிக்கின்றன.

இடை வேளைக்குப் பிறகு இருபது ஆண்டுகள் ஓடிச் சென்றுவிடுகின்றன நாடகக் கதையில். 'அதற்காகக் குடும்பத் தலைவனும் தலைவியும் இவ்வளவு கிழவர்களாகிவிட வேண்டுமா? நாடகத்தின் பிற கதா பாத்திரங்களுடன் ஒப்பிடுகையில் முதிர்ச்சி மிகுதியாகத் தெரிகிறதே' என்றால் 'பிள்ளையைப் பிரிந்த சோகம்; முதுமை முன்கூட்டியே வந்துவிட்டது' என்று பதில் கிடைக்கலாம்.

ஆனால் இடைவேளைக்குப் பின் மிகைப் படுத்தல் மேக்கப்பில் மட்டுமில்லை; நடிப்பிலும் காணப்படுகிறது. புஷ்பலதா ஒரேயடியாக உடலைச் சாய்க்கிறார்; ஏ.வி.எம். ராஜன் இறுதிக் காட்சியில் சிரமப்படுத்துகிறார்.

ஓரளவு மிகைப்பட்ட நடிப்பைத்தான் நமது மக்கள் ரசிப்பார்கள் என்பது உண்மையே. லோகிதாட்சனும் ஹரிச்சந்திரனும் பிரஹலாதனும் இன்னும் பலரும் பட்ட துயரில் நாமும் தோய்ந்துதான் வளர்ந்திருக்கிறோம். ஆயினும், தமது இரு மகன்களையும் ஆனந்த பரவசத்துடன் கட்டி அணைக்கும் சந்திரன், "எனக்கா லங் கான்ஸர்? என் இரு நுரையீரல்களும் இதோ இருக்கின்றனவே" என்ற அழகான வசனத்தைப் பேசிய கையோடு தலையைச் சாய்த்து விடலாம் என்றுதான் நினைக்கத் தோன்றுகிறது. அதற்குப் பின் நடப்பவை சோக ரசத்துக்குப் பதில் அருவருப்பைத் தருகின்றன.

அந்தக் காலத்து நாடகங்களில் இடைவேளையின் போது ஒரு கோமாளி தோன்றி ஏதாவது கூறிச் சிரிக்க வைத்து விட்டுப் போவான். பாச தீபத்திலும் இப்படி நகைச்சுவை கதையோடு ஒட்டாமல் துண்டாகவே நிற்கிறது. நடைபாதை டாக்டரும் பன்ரொட்டியும் ரசிக்கும்படியான பாத்திரங்களாக இல்லை. ஆயினும் வேறு சில ஹாஸ்யக் கதாபாத்திரங்களில் வருபவர்கள் இந்தக் குறையை இட்டு நிரப்புகிறார்கள்.

திரு சேஷாத்திரியின் டைரக்ஷனுடன் நடிப்பு போட்டி போட்டுச் சிறக்கிறது.

டைப்பிஸ்ட் கோபியின் நடிப்பைச் சிலாகித்தால் அவர் தாம் படித்துக் கொண்டிருக்கும் இவ்வாரக் கல்கியை மென்று தின்று விடலாம் மேடை ஞாபகத்தில்.

நாடகம் பல விதங்களிலும் சிறப்பாக இருப்பதால்தான் மேலே குறிப்பிட்ட சில குறைகளும் பளிச்சென்று மனத்தில் படுகின்றன, வெள்ளைத் தாளில் மைத்துளிகள்போல்.

"லிட்டில் ஸ்டேஜ்" மூலம் புதுமையான முயற்சிகளைச் செய்து நாடகக் கலையைப் பாசத்துடன் வளர்த்து வரும் ஏ. வி. எம். ராஜன், காதலுக்கு முக்கியத்துவம் இல்லாத பாசதீபம் நாடகத்தை அரங்கேற்றத் துணிந்ததற்காகவே பாராட்டுக்குரியவர்.

நடிப்பிலே அவர் மன்னன் என்பதுதான் பெயரிலேயே தொக்கி நிற்கிறதே!

# அப்பா செல்லமா? அம்மா செல்லமா?



## அத்தியாயம் 13

எல்லாப் பெண்களுமே பொதுவாகப் பார்ப்பதற்குக் கவர்ச்சியாக, பளிச்சென்றுதான் இருந்தார்கள். ஒவ்வொருத்தியும் ஒவ்வொரு விதத்தில் அழகு. கல்லூரியில் படிக்கிற பெண்களாகவே தோன்றவில்லை. இளமையின் மினுமினுப்பும் ஊட்டத்தின் தளதளப்பும் சேர்ந்து அவர்களுடைய மேனிக்கு மெருகேற்றி யிருந்தன.

அவர்களில் இரண்டொருத்தி நல்ல சிவப்பு; மூன்று நான்கு பேர் மாநிறம்; சிலர் கறுப்பு. கறுப்பு என்றாலும் குறிப்பான அழகு. குறுகுறுப்பான முகமும் குமிழ்ச் சிரிப்புமாக அவர்கள்தான் பார்க்கப் போனால் இன்னும் எடுப்பாக இருந்தார்கள். அதிலும் எல்லாரையும் விடச் சுசிலா நிறத்திலே சற்று மட்டுத்தான். ஆனால் எல்லாரையும்விட அவளுக்குத்தான் நல்ல உடற்கட்டு.

கண்டக்டருக்கு ஒரே குஷி. அவனும் கொஞ்சம் இள வட்டம்தான்.

''ஹலோ கண்டக்டர், இந்தப் பஸ் எப்பப் புறப்படும்?'' என்று கேட்டாள் சுசிலா.

''புறப்பட்டிற வேண்டியதுதான். உங்களுக்காகத்தான் தவக்கப்பட்டிருக்கு. ஏறிக்கிடுங்க!'' என்றான் அவன்.

அவர்களுக்கெல்லாம் லீடர்போல் இருந்தவள் நிர்மலாதான். ஆனால் பேசுவதற்கெல்லாம் சுசிலாதான் வருவாள். அவளுக்குத் துணையாக வருபவள் காமு.

''தேவலேயே. நமக்காகத்தான் காத்திருக்காங்களாம். ஏறிக்கலாமாடீ?... இல்லே, இன்னும் சித்தே நாழி காத்திருக்கச் செய்யலாமா?'' என்று கேட்டாள் காமு.

''என்ன வேணும்னாலும் செய்யுங்க தாயே, ஆனால் யாரையுமே காத்திருக்க மட்டும் வைக்காதீங்க; பாவம்!'' என்றான் கண்டக்டர் உருக்கமாகச் சொல்வது போல்.



"சரி, சரி, இதென்னடி பேச்சு; எல்லாரும் ஏறிக்குங்க. ஏறி ஒரு பக்கமா உக்காருங்க; மூலைக்கு ஒருத்தராப் போய் உக்கார்ந்திடாதீங்க" என்றாள் நிர்மலா.

"அடி இவளே, ரொம்பத் தாகமா எடுக்கிறதுடீ. போய் ஒரு கூல் டிரிங்க் குடிச்சிட்டு வந்துடலாம், வாயேன் !" என்று முறையிட்டு வருந்தி அழைத்தாள் யாமினி என்ற பெண், தன் அருகில் நின்ற கலாவைப் பார்த்து.

"என்னடி தாகம் உனக்கு எப்பப் பார்த்தாலும்? இத்தனை நாழி என்ன செய்தயாம்? எதிரேதானே கடையிருந்தது !" என்று அவளிடம் அலுத்துக் கொண்டாள் கலா.

"ஐ ஹாங்... என்ன தாகமாயிருந்தாலும் அதை உடனே தணிச்சிற வேண்டியதுதானே! போயிட்டு வந்திடுங்க, தாயே!" என்றான் அந்தக் கண்டக்டர்.

"சொல்லிட்டாருடி, போங்கடி !" என்றாள் காமு.

"உங்களைச் சொல்லலே தாயே, அவுகளைச் சொல்றேன்."

"நானும் இவுகளைத்தான் சொல்றேன் மகனே, உங்களையில்லே !"

"இருந்தாலும் இது போல நீங்க எல்லாத்துக்கும் வந்திறப்படாது. அதோ இருக்கிறாகளே, அவுக சொன்னாலும் நல்லா இருக்கும்!" என்று அவன், கீழே நின்றிருந்த சுசீலாவைச் சுட்டிக் காட்டிச் சொன்னான்.

காமுவுக்குப் புரிந்து விட்டது. கண்டக்டர் சுசீலாவைப் பேச்சுக்கு இழுக்கிறான் என்று. இவன் என்ன புதிது. எங்குமே இதே கதைதான். அப்படி என்னதான் இருக்குமோ இந்தச் சுசீலாவிடம் ? காமுவுக்குக் கண்டக்டர் மீது எரிச்சலாகவும் சுசீலாவின் மீது சற்றுப் பொறாமையாகவும் இருந்தது.

# காணிக்கை

ஆர்வி



சுசிலா சிரித்துக்கொண்டே, ''என்ன சொல்றார், கண்டக்டர்?'' என்று கேட்டாள்.

''நம்மையெல்லாம் பார்த்தால் தாயாகவும் பாட்டியாகவும் இருக்காம் அவருக்கு. அதான் சொல்றார்!''

''நாங்கள்ளாம் இன்னும் இருபதைக்கூட எட்டலியே, கண்டக்டர்! இப்படிச் சொல்லலாமா?''

''மன்னிச்சுடணும் தாயே. அது ஒரு மரியாதை. தென்பாண்டிய நாட்டிலே பச்சைப் புள்ளேகூடத் தாய்தான். என்ன? நீங்கள்ளாம் தாய்க் குலம்லா?''

''அப்படின்னு அப்பிலே இல்லே'' என்றாள் காமு, எரிச்சல் கேடாக.

''கோச்சுக்கிடுதிய போலிருக்கு.... வாயைத் தொறக்கல்லே.''

பஸ்ஸுக்குள்ளே சிரிப்பும் கொம்மாளமுமாக இருந்தது. ஒரே கீச்சு மூச்சுக் குரல்கள். கூட்டமும் கொஞ்சம் கொஞ்சமாகச் சேர்ந்து பஸ் நிறைந்து கொண்டிருந்தது. எதிர்க் கடைக்குச் சென்றிருந்த யாமினியும் கலாவும் அன்ன நடையாக வந்து சேர்ந்தார்கள்.

''தாகம் தீர்ந்துதாடி இவளே?'' என்று யாரோ ஒருத்தி கேட்டாள்.

''வெறும் தண்டம்டி இந்த ஊரு. ஐஸ் கேட்டா, ஐஸ் இல்லியாம். பல்லேக் காட்டறான் பையன்!'' என்று அலுத்துக் கொண்டாள் கலா.

''யாமினிக்குத் தாகம். உனக்கு ஐஸ் இல்லாட்டிப் போனால் என்ன? எதுக்கெடுத்தாலும் ஒரேமுட்டா அலுத்துக்கிறியே!'' என்றாள் காமு.

''வேறே யாருக்கும் தாகம் எடுக்கலியா?'' என்று ஏலம் போட்டான் கண்டக்டர். ''போறதானா போயிட்டு வந்திறலாம்'' என்றான்.

''பஸ் எப்பத்தான் புறப்படப் போறது? நாழியாகுமா?''

''அவசரமா இருந்தாப் புறப்பட்டிற வேண்டியதுதானே. டிரைவர் சார்வாள் வரணும். வந்ததுமே புறப்பட்டிருவோம். என்ன?''

யாமினியும் சுசிலாவும் சேர்ந்து உட்கார்ந்திருந்தார்கள். கண்டக்டர் பேசிய விதம் அவர்களுக்குச் சிரிப்பாக இருந்தது.

''நெளியற நெளியலும் பண்ணிக்கிற சேஷ்டையும் கொஞ்சங்கூடச் சகிக்கல்லியே!''

''இவன் கெடக்கிறான், பாவம் — என்னமோ எல்லாரும் பெண்களா வந்து ஏறியிருக்காங்களேன்னு குஷி தாங்கல்லே இவனுக்கு. அதோ எதிர்ப் பக்கமா, பாண்ட்டும் ஷர்ட்டுமா உக்காந்துண்டு இருக்கானே.. நம்மையே பார்த்துண்டு, அவன் செய்துக்கிற கோணங்கியைக் கொஞ்சம் கவனிச்சுப் பாரேன். முகத்திலே அசடு வழியறது. மனசுக்குள்ளே தன்னைப் பத்தி என்ன நினைப்போ, தெரியல்லே. தலையைத் தடவி விட்டுக்கறான்; பல்லேக் காட்டறான். இதுக்குள்ளே எத்தனை தடவை இந்த வழியா வந்து இறங்கி ஏறிட்டான், தெரியுமோ?''

''ஓகோ — அந்த ஆளா? அவனை நாங்க கூல் டிரிங்க் கடையிலேயே பார்த்தோமே. எங்களையே வெறிக்க வெறிக்கப் பார்த்துண்டு வாங்க வந்ததை மறந்துட்டு நின்னான். கொஞ்சம் லூஸ் போலிருக்கு!''

''கொஞ்சமா? முழு லூஸ்! இந்தப் பக்கமா வரபோது காலே நீட்டி அப்படி இடறி விடணும் போல இருக்கு. இன்னொரு தடவை வரட்டும்; செய்யறேனா இல்லையா, பார்.''

''அதுக்குள்ளே பஸ் கிளம்பிடும்.''

''இதுக்காகவே பஸ் இன்னும் சித்தே கழிச்சுக் கிளம்பினால் கூடத் தேவலே. அப்படி ஆசையாயிருக்கு, எனக்கு!''

''என்னடி இது?''

''இடறி விழறதைப் பார்க்கிற ஆசையைச் சொல்றேண்டி. அதுக்குள்ளே நீ என்னமோ அர்த்தம் பண்ணிக்கிறியே. போயும் போயும் ஆசைப்படறதுக்கு நல்ல அவலட்சணமாப் போய்ச் சொன்னியே!''

இருவரும் தங்களுக்குள் சிரித்துக் கொண்டார்கள்.

''மறுபடியும் ரெண்டு பேரும் சேர்ந்துட்டாங்கடி! அப்படி என்னதான் பேசுவாங்களோ, எதுக்குத்தான் சிரிப்பாங்களோ?'' என்றாள் காமு.

''நீயும் வேணா வந்து சேர்ந்துக் கோயேன்'' என்று அவளை அழைத்தாள் யாமினி.

''அடி, அவள்கிட்டே பேசாதே. அவள் இதுதான் சாக்குன்னு வந்து உக்காந்துடுவாள். வந்தால் நான் எழுந்து போயிடுவேன். வீணா பொறுமைப்பட்டுப் போய்ச் சொல்றாள். அது புரியாம அவளைக் கூப்பிடறியே!'' என்று ரகசியமாக அவளை அடக்கினாள் சுசிலா.

சுசிலா ஆசைப்பட்டது வீண் போகவில்லை. இவர்கள் இருவரும் தன்னையே பார்த்துக் கொண்டு பேசுவதைப் பார்த்து இருப்புக் கொள்ளாத அவன் தன் இடத்தை விட்டு எழுந்து வந்தான். அதற்குள் பஸ் திடீரென்று புறப்பட்டு விட்டது. பாதித் தூரம் வந்துவிட்ட அவன் திரும்பிவிடப் பார்த்த போது, நிலை தடுமாறிப் போய்ச் சுசிலாவுக்கு அருகில் இடறி விழ இருந்தான். நல்ல

# படத்திறப்பு விழா-புதுமுறை!




"ஜம்னுலால் பஜாஜ் அவர்களுடைய வண்ணப் படத்தைத் தாங்கள் திறக்க வேண்டும்!"

ராஜாஜி அவர்களிடம் வேண்டி நின்ருர் அவர்.

"மகிழ்ச்சிகரமான, எனக்குப் பிடித்தமான காரியத்தைத் தான் செய்யச் சொல்லி அழைக்கிறீர்கள். எனக்குப் பூர்ண சம்மதந்தான். ஆனல் இந்த வயதான காலத்தில்....."

வேண்டி நின்ற ஸ்ரீ சத்தியநாராயணு அவர்களுக்கும் அவரை வற்புறுத்துவது சிரமமாகத்தான் இருந்தது. யோசித்தவாறு நின்ருர். "தபால் இலாகாவினரும் அன்று அவர் நினைவாகத் தபால் பில்லைகள் வெளியிடுகின்றனர்!" பேச்சைத் தொடங்குவதற்காகச் சொல்லி வைத்தார்.

"ஆமாம். ஒரு நல்ல மனிதரின் முகத்தில் கறுப்பு பூசும் காரியத்தை எதற்காகத்தான் செய்கிறார்களோ?" ஜேப்பார்வையில் சிரித்தவாறே கேட்ட ராஜாஜி, "அதாவது அழகான படம் தயாரித்து, அதன் தலையில் தபால் முத்திரை பதித்து அனுப்புவதைத்தான் கூறுகிறேன்!" என்று முடித்தார்.

பணம் படைத்த ஜம்னுலால் பஜாஜ், அந்தப் பணத்தின் நல்ல விநியோகத்தை உணர்ந்திருந்ததையும் காந்தியடிகளின் அஹிம்சைப் போராட்டத்தில் அவர் கொண்டிருந்த பங்கையும், அவரோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த ராஜாஜி அவர்களால் மறக்க முடியுமா?

'ஜம்னுலால் பஜாஜ் (கமல்நயன் பஜாஜ், எம். பி. அவர்களின் தந்தை) நிரம் வாய்ந்த நன்மக்களிலே ஒருவர். மற்றவர்கள் காந்தியடிகளின் போர்ப்படை வீரர்களாகச் சேருவதற்கு முன்பே தமது ஒத்துழைப்பை நல்கியவர். நாம் ஜம்னுலால்ஜியை மறக்க முடியாது. யார் மறந்தாலும் நான் மறக்க முடியாது!'

தீபாவளித் திருநாளில் தம் கை யொப்பமிட்டு ஆங்கிலத்தில் இச் செய்தியை வழங்கினர்.

திரு சத்தியநாராயணு அதைக் கண்ணுற்று மகிழ்ந்தார். அதே நேரத்தில் "அந்த வண்ணப்படம் எங்கிருக்கிறது?" என்று கேட்டார் ராஜாஜி.

"இதோ!"

கையுடனேயே கொண்டு சென்றிருந்த படத்தைக் காட்டினர் ஸ்ரீ சத்தியநாராயணு.

உடனே அதன் பின் புறத்தில், தாமே அப்படத்தைத் திறந்ததாகத் தேதியும் கையெழுத்தும் இட்டு அளித்தார் ராஜாஜி.

ராஜாஜி நேரில் கலந்து கொள்ளாமலே திறப்பு விழாப் பெருமை பெற்ற ஜம்னுலால்ஜியின் படம் தென் இந்திய ஹிந்தி பிரசார சபைக் கட்டடத்துக்கு அணி சேர்க்கிறது. - அக்ஷயம்

---

காலம்; அந்தப் பக்கத்தில் இருந்த ஒருவர் அவனைத் தாங்கிப் பிடித்தார்.

"பாவம், தடுத்துட்டாங்கடி. நமஸ்காரம் பண்ணியிருந்தால் மனமார ஆசீர்வாதம் செய்திருக்கலாம்" என்ருள் சுசிலா.

அது அவன் காதில் விழுந்து விட்டது. முறைப்பாக அவளைப் பார்த்துவிட்டுப் போனவன், தன்னிடத்தில் போய் உட்கார்ந்தபிறகும் அவர்கள் இருவரையும் விடாமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

சுசிலாவும் யாமினியும் அவனைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் சாலையின் இரு புறங்களையும் தூரத்தில் தெரிந்த மலை ஒன்றையும் வேடிக்கை பார்த்துக் கொண்டே வந்தார்கள். அகண்ட பாரதத்தின் குறுகலான தென் முனையை நோக்கிப் போகிற எண்ணத்தில் சிலருடைய கண்கள் இருமருங்கிலும் நீலக் கடலைத் தேடிக் கொண்டிருந்தன.

"எங்கேடி சமுத்திரத்தையே காணலை?" என்று கேட்டாள் ஒருத்தி.

"இருடி வரும்; மலைக்கு அந்தப் பக்கமா இருக்குமோ, என்னமோ!" என்ருள் பார்வதி.

"சமுத்திரத்தைத் தேடறீங்களா? இது என்ன அட்லாஸ் படம்னு நினைச்சீங்களா, கால் அங்குல தூரத்திலே தெரியறதுக்கு. இங்கேயிருந்து குறைஞ்சது கிழக்குப் பக்கமா இருபது மைலாவது இருக்கும். இந்தப் பக்கம் திருவனந்தபுரத்திலேதான் சமுத்திரம். இனிமே நாம கன்னியாகுமரிக்குப் போனுத்தான் அதைப் பார்க்கலாம்" என்று அவர்களுடைய சந்தேகத்தைத் தீர்த்து வைத்தாள் நிர்மலா.

"அதானே பார்த்தேன், இவ என்னமோ மலைக்கு அந்தப் பக்கமா சமுத்திரம் என்கிருளே, தெரிஞ்சாப்பலே."

"நான் அப்படியா சொன்னேன்?"

அப்படித்தான் சொன்னுள் என்று ஒருத்தியும் அவள் எப்படிச் சொன்னுள் என்று ஒருத்தியுமாகச் சாட்சியம் சொல்லத் தொடங்கினர்கள். கடைசியில் வாக்குவாதம் பெரிதாக வலுத்து விட்டது. சமுத்திரத்தைப் பற்றின சர்ச்சை அவர்களுடைய சாமுத்திரிகா லட்சணத்தைப் பற்றிய ஆராய்ச்சிக்குப் படர்ந்து விட்டது. நடுவில் கோஷ்டி சேராக் கட்சி ஒன்று உருவாகி அவர்களைச் சமாதானப்படுத்த முயன்றது.

இந்த அருமையான வாய்ப்பை விட்டு விடுவானு பஸ் கண்டக்டர்? படு உற்சாகமாக அதில் அவனும் கலந்து கொண்டான். "என்னவே பலவேசம், கண்டக்டர் சோலியா நடக்கு?" என்று கேலியாகக் குரல்கொடுத்தார் டிரைவர்.

திருநெல்வேலியை விட்டுப் புறப்பட்ட பஸ் நாங்குநேரியில் வந்துதான் சிறிது நேரம் நின்றது.

''மறுபடியும் தாகமாக இருக்குடி'' என்றாள் யாமினி.

''எனக்கும்தான். வா, இளநீர் கிடைக்குமான்னு இறங்கிப் பார்க்கலாம்'' என்று எழுந்தாள் சுசிலா.

கீழே இறங்கித் திரும்பியதுமே யாமினி அப்படியே திகைத்து நின்றுவிட்டாள். பெட்ரோல் பங்க் போலிருந்த இடத்திலிருந்து ஒருபுதிய ஃபியட் கார் புறப்பட்டுக் கொண்டிருந்தது. அவள்தான் கவனித்தாளேதவிர, வண்டியிலிருந்தவன் அவளைக் கவனிக்கவில்லை. அவள் அதிர்ச்சியிலிருந்து மீள்வதற்குள் வண்டி சீறிக் கொண்டு போய் விட்டது.

## அத்தியாயம் 14

காவிரி நதி தீரத்தில் விளைந்த கரும்பாகத்தான் அவள் தோகையும் குருத்துமாக இருந்தாள். அவளை எதனோடு ஒப்பிட்டாலும் பொருந்தாதுபோல் இருந்தது. அந்த அருணோதய வேளையில் அசாதாரணமான அழகு படைத்தவளாக அவன் கண்களுக்குத் தோன்றினாள் அவள். அந்தப் பார்வை, அந்தச் சிரிப்பு, உதடு நலுங்காத பேச்சு, இழையோடும் புன்னகை இதழ்கள் எத்தனையோ மங்கையருக்கு இருக்கலாம்; இருப்பதும் அவனுக்குத் தெரியும். ஆனால் இந்தப் பாணி வேறு யாருக்கும் வராது. இந்த நாட்டிலும் சரி, வெளிநாட்டிலும் சரி, அவனுக்குத் தெரிந்தவரையில் இல்லவே இல்லை. இது ஒரு தனி ரகம்.

மூன்று கடலும் கலக்கும் முனையில், மணல்மேட்டில் இருந்த அங்காடிகளில் அவன் அவளைப் பார்த்த போது முதலில் அவனுக்கும் ஆச்சரியமாகத்தான் இருந்தது. அவளோடு போய்ப் பேசலாம் என்று குறுக்கும் நெடுக்குமாகக்கூட நடை போட்டுப் பார்த்தான். அப்போதெல்லாம் அவள் சங்குகளையும் மணிகளையும் பார்ப்பதில் ஈடுபட்டிருந்தாளே தவிர, அவனைக்கவனிக்கவில்லை. திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

விவேகாநந்தர் பாறைக்குப் படகில் செல்லும்போது அவன் கரைக்குத் திரும்பிக் கொண்டிருந்ததை அவள் பார்த்தாள். ஆனால் பெண்கள் கூட்டத்தின் பக்கமே பார்வையைச் செலுத்தாமல் அவன் கூட்டத்தோடு மறைந்து போய் விட்டான்.

குமரியன்னையின் சந்நிதியில் அந்த இருட்டிலும் கூட்டத்திலும் அவர்கள் இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். இருவர் முகத்திலும் புன்னகை அரும்பியது போலக்கூடத் தோன்றியது. ஆனால் அவள் பெண்கள் வரிசையிலும் அவன் ஆடவர் வரிசையிலுமாக நின்று கொண்டிருந்தார்கள்.

அன்னைக்கு நடந்த கர்ப்பூர ஆரத்தியைக் கண் குளிரக் காண்பதா, அவர்கள் ஒருவரையொருவர் கண்களால் தேடிக் கொண்டிருப்பதா? சந்நிதியை விட்டு வெளி வருகிற போது அவன் எங்கே போனானோ, அவள் எங்கே இருந்தாளோ? அவர்கள் சந்திக்கவில்லை.

காந்தி மண்டபத்துக்கு எதிரேயிருந்த மேட்டில் அவனுடைய வண்டி நின்றதை அவள் போகும் போதும் வரும்போதும் பார்த்துக் கொண்டே போனாள். அந்த வண்டியின் அடையாளம் அவள் மனத்தில் அழியாத சித்திரமாய்ப் பதிந்து போய் விட்டது. அவனைத்தான் கண்ணிலேயே காணவில்லை. அஸ்தமன அழகை அவன் எங்கிருந்து பார்த்து ரசித்துக் கொண்டிருந்தானோ, தெரியாது. சிவப்புக் கோளமாய், அலை கடலுக்கு மேலே புகை மூட்டம் போலிருந்த படலத்தினுள்ளே மூழ்கி மறைந்து கொண்டிருந்த ஆதவனின் செம்மையெல்லாம் அவள் முகத்திலும் பிரதிபலித்தது. எரிச்சலையும் ஏமாற்றத்தையும் விழுங்கிக் கொண்டு அந்தக் காட்சியை அவளால் எவ்வளவு நேரம் ரசிக்க முடிந்ததோ, தெரியவில்லை.

அவனும் ஏமாற்றத்தோடுதான் கன்னியாகுமரியை விட்டுப் புறப்பட்டான். அவளைச் சந்தித்துப் பேசாவிட்டாலும் இன்னொரு முறையாவது பார்க்காமல் திரும்புகிறோமே என்று ஏக்கமாகத்தான் இருந்தது. ஆனால் வழியிலிருந்த சுசீந்திரத்தில் அவன் சிறிது நேரம் தங்க வேண்டி வந்து விட்டது. அந்த ஊரின் பிரசித்தமான கோயிலில் என்னவோ திருவிழா. தெருவை அடைத்துப் பந்தல்; சங்கீதக் கச்சேரி.

'வந்ததுதான் வந்தோம்; கோயிலைப் பார்த்து விட்டுத்தான் போவோமே?' என்று வண்டியைக் கோயிலை அடுத்த குளக் கரையில் நிறுத்தி விட்டு, கூட்டத்திடையே ஒதுக்கியிருந்த வழியோடு கோயிலுக்குள்ளே போனான். கால் மணி நேரம் போல ஒவ்வொரு சந்நிதியாகப் பார்த்து விட்டு, அதிக வெளிச்சமில்லாத இருண்ட பிராகாரத்தைச் சுற்றி விட்டு வந்த போது வெகு சமீபத்திலே

Who cares if your hair is different?

# Sunsilk cares–
## with 3 special shampoos

**Pick the one that's perfect for you**

**Sunsilk Lemon Shampoo**
**For Greasy Hair:** Gently washes out excess grease...gives you days of clean, bouncing, silken hair.

**Sunsilk Tonic Shampoo**
**For Dry Hair:** Contains Allantoin to nourish your hair...revives that silken lustre, leaves hair softly glowing.

**Sunsilk Beauty Shampoo**
**For Normal Hair:** Perfectly balanced to keep your hair in beautiful condition, weaving silk into every strand.




**Sunsilk** - more than a shampoo, a cosmetic for your hair

ality Products by HINDUSTAN LEVER

LINTAS-SS. 11-140

சம்பங்கி மலரின் மணமோ, மனோ ரஞ்சிதத்தின் மணமோ வீசுவதுபோல் இருந்தது. கோயில் பிராகாரத்தில் இப் படிப் பூ மணப்பதில் ஆச்சரியம் என்ன இருக்கிறது என்று அவன் வாசலைத் தாண்டி வந்து ரசிக மகாஜனங்கள் வரிசையில் போய்ச் சிறிது நின்றான்.

ஒரு பாட்டாவது கேட்டு விட்டுப் போகலாம் என்று மணலில் இருந்தவர் களுக்கு இடையிலே போய் உட்கார்ந்து கொண்டான். கச்சேரி நன்றாகக் களை கட்டியிருந்தது. பாடினவருக்குச் சுக மான சாரீரம்; அழுத்தமான ஞானம்.

திடீரென்று யாரோ பரபரப்பாக வந்து பக்கத்திலே உட்காருவதைக் கண்டு அவன் பார்வையைத் திருப்பி னான். அவனுக்குத் தூக்கிவாரிப் போட் டது. குமரி முனையில் பார்த்தும் சந் திக்க முடியாமல் அவனை ஏங்க வைத்த குமரி. அவனை ஒரு முறை புள்ளி மானைப் போல் பார்த்து விட்டு அவள் அருகில் வந்து உட்கார்ந்து கொண் டாள்; மெல்லப் புன்னகையும் புரிந் தாள், வெற்றிப் புன்னகை மாதிரி. அதைக் கண்களாலேயே பருகியபடி அவ னும் பதிலுக்கு மரியாதையாக மந்த காசம் செய்து நகர்ந்து கொண்டான்.

அவள் இன்னும் சிறிது நெருங்கி உட்கார்ந்து கொண்டாள். அதே மனோ ரஞ்சித மலர் வாசனை. அவள் கூந்தலில் பூ ஒன்றும் சூடிக் கொண்டிருக்கவில்லை. வேறு ஏதோ வெளிநாட்டுச் சென்ட் வகையும் அல்ல. அவளேதான் இப்படி மணக்கிறாளோ? பெண்களுக்கு இயற்கை யாகவே இப்படி ஏதாவது ஒரு வாசனை இருக்கும் போலிருக்கிறது. ஆனால், அதைப் பற்றி அவன் என்ன கண் டான்? எத்தனையோ பெண்களிடம் அவன் பழகியிருக்கிறான். அஜிதாவிட மும் சோபனா ஜோஷியிடமும் இன்னும் நெருங்கிக் கூடப் பழகியிருக்கிறான். இருந்தாலும் இது அவனுக்குப் புது முதல் அநுபவம்.

''உங்க வண்டிதானே குளக்கரையில் நிக்கறது?'' என்று மெல்ல முணுமுணுத் தாள் அவள்.

''ஆமாம்.''

''அதிலே வேறு யாரும் வரல்லே போலிருக்கே. நீங்க மட்டும்தானே ?''

''ஆமாம்; நான் மட்டும்தான்.''

''அப்படியானால் ஒருத்தர் வரலாமா? இடம் கிடைக்குமா ?''

''யாருக்கு?''

''அதைப் பொறுத்துத்தான் இருக் குமா பதில்?'' — இதைச் சொல்லும் போது புன்னகை இதழ் நெளிந்தது.

''அப்படி ஒண்ணுமில்லே. இருந் தாலும் தெரிஞ்சுக்கப்படாதா?''

''எனக்குத்தான் !''

எல்லாரும் சங்கீதத்தில் தோய்ந் திருந்தார்கள். இவர்களை யாரும் கவ னிக்கவில்லே.

''நான் மட்டும்தானே வந்திருக் கேன்; பரவாயில்லையா ?''

''அதனால்தானே கேக்கறேன்!''

''ஓ !''

''வரலாமோ இல்லேயோ? இடைஞ் சல் ஒண்ணுமில்லேயே?''

''வரலாம். ஆனால் நான் இப்பவே, இன்னும் சித்த நாழியிலே புறப்பட்டுடு வேனே. அதுக்குள்ளே வர முடியுமா?''

''நானும் இப்பவே, இப்படியே புறப் பட்டுட வேண்டியதுதான் !''

''என்னது, வேறே ஒண்ணும் எடுத் துக்காமலா?''

அவள் அவனை ஒரு பார்வை பார்த் தாள். அடேயப்பா, எத்தனை நீளமான விழிகள்! பாஸ்கரன் நிலைதடுமாறினான்.

'' எனக்கு வேண்டியது இதிலேயே இருக்கு !''

பாஸ்கரன் அதற்கு மேல் அவளை ஒன்றும் கேட்கவில்லை. அவள் கையில் வைத்திருந்த அழகிய தோல் பை அப்படி ஒன்றும் பெரியதாக இல்லை. பணமும் சில சில்லறை அலங்காரப் பொருள்களும் இருக்கலாம்.

அதைப் பற்றிக் கவலைப்படுவதை விட்டு விட்டு, கச்சேரியில் சிறிது கவனத்தைச் செலுத்திப் பார்த்தான். முடிந்தால்தானே?

''புறப்படலாம்னு பார்க்கறேன்.''

அவள் முகத்தில் மீண்டும் ஒரு புன் னகை அரும்பியது. பிறர் தப்பாக நினைக்க முடியாத புன்னகை. அவன் வரையில் மயக்கம் தருகிற புன்னகை.

''நான் முதல்லே போறேன். ஒரு நிமிஷம் பொறுத்து நீங்கள் வரலாம்'' என்று அவள் மிகவும் நளினமாக எழுந்து நடந்தாள். அவள் கண் ணுக்கு மறையும் வரையில் காத் திருந்து விட்டு அவனும் அவள் போன வழியையே பின்பற்றிச் சென்றான்.

எல்லாம் ஏதோ கனவில் நடப்பது போல இருந்தது. இது எப்படி நேர்ந் தது என்று அவனுக்குப் புரியவேயில்லை. அதைப் பற்றியெல்லாம் அவளையே கேட்டுத் தெரிந்து கொள்ளலாம் என்று மனம் துள்ளிக் கொண்டிருந்தது.

எத்தனையோ பெண்களிடம் பேசிப் பழகியிருக்கும் அவனுக்கு இது முற்றி லும் புது அநுபவமாகத் தோன்றியது. கனவு கலைந்துவிடப் போகிறதே என்று அஞ்சுபவன்போல் அவன் பந்தலை விட்டு அவசரமாகச் சென்றான். (தொடரும்)



# ரகுபதி ராகவ

## மகாத்மா காந்தி

தமிழாக்கம்— ராஜாஜி

## 51-(2)

அற நூல்களைப் பிழையின்றிப் புரிந்து கொள்ள வேண்டுமானால் அவற்றைப் பக்தியோடு படிக்க வேண்டும். வாழ்க்கை அனுபவத்தையும் செலுத்திப் படிக்க வேண்டும். சாஸ்திரங்களைக் கீழ் மக்கள் படிக்கக் கூடாது என்று சொல்லுவதின் பொருள் இதுவே. யார் கீழ் மக்கள் என்றால் பண்பாடு அடையாதவர்கள். கயவர்கள் வேதத்தையாவது மற்ற சாஸ்திரத்தையாவது படித்தால் தவறான பொருள் தான் கொள்வார்கள். சாஸ்திரம் படிப்பதற்கு எல்லாருக்கும் தகுதியிருப்பதாக வைத்துக் கொள்வதற்கு இல்லை. கணித சாஸ்திர உயர்தரப் புஸ்தகங்களை எல்லாரும் படிக்க முடியுமா? படிப்படியாகப் பயிற்சி அடைந்த பிறகுதான் பொருள் தெரிந்து படிக்க முடியும். சாஸ்திரம் படிப்பதற்கும் பயிற்சி வேண்டும். தினமும் பாப காரியங்களைச் செய்து கொண்டிருக்கிற ஒருவன் ஹிந்து சாஸ்திரத்தைப் படித்து 'நான் பிரம்மம் ஸோஹம்' என்று சொல்ல முடியுமா? ''நீயே பரம் பொருள்—தத்வமஸி'' என்று வேதாந்தத்தில் சொல்லியிருப்பதை அவன் எவ்வாறு பயன்படுத்திக் கொள்ள முடியும்? பாப காரியங்களுக்கே அந்த உண்மையையும் உபயோகப்படுத்திக் கொள்வான் அல்லவா?

எனவே, சாஸ்திரம் ஓதிப் பயன்படுத்திக் கொள்வதற்குமுன் அதற்கு வேண்டிய வாழ்க்கைத் தூய்மையும் பண்பும் அடைய வேண்டும். இயமம், நியமம் என்பது இதுவே. தகுதி பெறுவதற்குப் புலனடக்கமும் தினசரி கிரமங்களும் அவசியம்.

வாழ்க்கை எவ்விதம் நடத்த வேண்டும் என்பதை உணர்ந்து வாழ்க்கை நடத்தித் தகுதி அடைய வேண்டும். வெளிவேஷ மந்திரமும், கிரியைகளும் மட்டிலும் போதாது. பழைய காலத்தில் தகுந்த ஆசாரியன் ஒருவனை அடைய வேண்டும் என்று சொன்னார்கள். இக்காலத்தில் தகுதி வாய்ந்த ஆசாரியனைப் பெறுவது கடினம். அதற்குப் பதிலாகப் பக்தி புகட்டும் எளிய நூல்களைப் படித்துப் பண்பு அடையலாம் என்று பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

பக்தியில்லாதவர்களும் நம்பாதவர்களும் சாஸ்திரங்களுக்குப் பொருள் கூற முடியாது. பக்தியும் நம்பிக்கையுமில்லாமல் அதிகப் படிப்பு மட்டும் அடைந்தவர்கள் உண்டு. அத்தகைய வித்வான்களும்கூட சாஸ்திரத்துக்குப் பொருள் சொல்லிச் சரியான உபதேசம் செய்ய முடியாது. ஆத்ம அநுபவம் பெற்றவர்கள்தான் சாஸ்திரம் போதிக்க முடியும்.

எல்லாவற்றுக்கும் மேல் ஒரு முக்கியமான பிரமாணம் உண்டு. உண்மைக்கு மாறானது சாஸ்திரத்தின் பொருளாகாது. சத்தியம் என்றால் என்ன என்று விதண்டாவாதம் செய்பவனுக்கு நாம் ஒன்றும் சொல்ல இயலாது. சொல்லுவதில் பயன் இல்லை. அப்பேர்ப்பட்டவன் சாஸ்திரங்களில் ஓர் அர்த்தமும் காண மாட்டான்.

(யங் இந்தியா, 12-11-25)




## 17. மானம் பிழைத்தது!

'காலைக் குரல்' அதிபர் ஆதிமூலம் 'பாரதமணி'யைக் கவிழ்க்கச் சதி செய்வதாகக் கேள்விப்பட்டதும், முரளிக்கு உள்ளூற நடுக்கம் ஏற்பட்டது. இருந்தாலும் இயல்பாகவே அமைந்துவிட்ட பிடிவாதமும், துணிவும் அவன் மனத்தைத் தூக்கி நிறுத்தின.

''என் உயிரே போனாலும் சரி, 'பாரதமணி'யை ஓய விடமாட்டேன்'' என்றான் முரளி, ஆவேசத்துடன்.

''நானும் அதைத்தான் விரும்புகிறேன். எதற்கும் நீ, ஆதிமூலம் விஷயத்தில் விழிப்புடன் இருந்துகொள்'' என்றான் சிவராமன்.

சிவராமன் போன பிறகும் முரளி வெகுநேரம் சோர்ந்து போய் நாற்காலியில் சாய்ந்து கிடந்தான்.

* * *

டில்லியிலிருந்து சாமிநாதன் திரும்பிச் சில நாட்கள் ஆகிவிட்டன. ஒரு நாள் 'பாரதமணி'க் கட்டடத்துக்குள் சாமிநாதன் பரபரப்புடன் நுழைந்தான். உதவி ஆசிரியர்களின் அறைக்குள் புகுந்து முருகானந்தம் மேஜைமீது 'காலைக் குரல்' பத்திரிகையை வைத்தான்.

''சார்! சார்! இதைப் பாருங்கள். 'காலைக் குரல்' நாளையிலிருந்து ஒரு புதுப் பகுதியை ஆரம்பிக்கப் போகிறது'' என்றான்.

முருகானந்தம் பத்திரிகையைப் புரட்டாமலே வியப்புடன் சாமிநாதனைப் பார்த்தார்.

''சினிமா நடிகர், நடிகைகளின் வாழ்க்கை வரலாற்றைத் தொடர்ந்து வெளியிடப் போகிறதாம். சினிமா நட்சத்திரங்களின் படங்கள் பெரிய அளவில் தினமும் பிரசுரமாகப் போகிறதாம். 'கேள்வி — பதில்' பகுதி ஒன்றையும் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் பிரசுரிக்கப் போகிறதாம். வாசகர்களின் கேள்விக்குச் சினிமா நட்சத்திரம் பதில் சொல்வாராம்....'' — மூச்சு விடாமல் படபடப்புடன் கூறினான் சாமிநாதன்.

''இதற்கு இப்போது என்ன?'' என்று அமைதியாகக் கேட்டார் முருகானந்தம்.

''ஏற்கனவே நம்முடைய பத்திரிகையின் விற்பனை விழுந்து கொண்டிருக்கிறது.... இனி அவ்வளவுதான்...ஏன் சார், நாமும்

இப்படி ரசனையாக ஏதாவது ஆரம்பித்தால்......?''

''இதென்ன, 'காலைக் குரல்' மாதிரி நினைத்தாயா? பத்திரிகையே நின்று போனாலும் நம்முடைய தரம் நிச்சயம் விழாது'' என்றார் முருகானந்தம், பெருமிதத்துடன்.

''இப்படியே போனால், நம் பத்திரிகையை மூட வேண்டியதுதான்'' என்றான் சாமிநாதன்.

''கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே, சங்கு சுட்டாலும் வெண்மை தரும்'' என்றார் முருகானந்தம், ராகத்துடன்.

''அப்படியானால் கெட்டுக்கொண்டேயிருக்க வேண்டியதுதான்.... பத்திரிகை வாழ்ந்தால்தான் சார், நாம் வாழ முடியும். இல்லையென்றால் மாதா மாதம் யார் நமக்குச் சம்பளம் கொடுக்கப் போகிறார்கள்?'' என்றான் சாமிநாதன் பரிதாபத்துடன்.

''சாமிநாதா! 'பாரதமணி' ஒரு லட்சியப் பத்திரிகை. இந்நாட்டுக்கே இது பெருமையைக் கொடுத்துக்கொண்டிருக்கிறது. இது அழிந்தால் மக்களுக்குத்தான் கேவலம்.''

''இதைப் பற்றி மக்கள் கவலைப்பட்டதாகத் தெரியவில்லையே, சார்! 'காலைக் குரலை'த்தானே 'க்யூ'வில் நின்று வாங்குகிறார்கள். மக்களுடைய தரம் தெரிந்து நாமும் நடந்துகொள்ள வேண்டும், சார்.''

''மக்களுடைய தரத்தை உயர்த்தும் கடமை, பத்திரிகைக்கு உண்டு. அதை மறந்து காசை மட்டுமே பெரிதாக எண்ணுவதாயிருந்தால்.... காசுதான் பெரிது என்றால், அதைச் சம்பாதிக்க எத்தனையோ வழிகள் உண்டு, சாமிநாதா! தாசிகூடத்தான் சம்பாதிக்கிறாள்'' என்று முகத்தைச் சுளித்துக்கொண்டு கூறினார் முருகானந்தம்.

இந்தச் சமயத்தில் பிரேமா, அந்த அறைக் கதவைத் திறந்து வெளியில் நின்றவாறே தன் தலையை மட்டும் உள்ளே நீட்டினாள்.



# நீண்டகால அனுபவமே நற்புகழுக்கு உரைகல்

## 30 ஆண்டுகளுக்கு மேற்பட்ட அனுபவம் ஒவ்வொரு எஸ்ட்ரெலா பேட்டரியிலும் உரமேறியுள்ளது.

மேம்பட்ட புதுப் புது பேட்டரிகளைத் தயாரித்தல், முடிவில்லாப் பணியாக நடைபெறுகிறது எஸ்ட்ரெலாவிலே. தற்காலம் காகிதம், பிளாஸ்டிக், உலோகம் ஆகிய உறைகளையுடைய பேட்டரிகள் கிடைக்கின்றன. எல்லாமே கசியாத்தன்மையுடையவை. எல்லாமே அதிக காலம் உழைத்து, மேம்பட்ட செயல்திறனை வழங்க உத்தரவாதமானவை. 30 ஆண்டுகால அனுபவத்தின் கற்பகன்கள் இவை.



**எஸ்ட்ரெலா**

**பேட்டரிகள்**

**அதிக சக்தி**
**அதிக உபயோகம்**

எஸ்ட்ரெலா பேட்டரீஸ் லிமிடெட்

Focus PRC THL

"எடிட்டர் வருகிறார்" என்று எச்சரித்துவிட்டு மீண்டும் கதவைச் சாத்தினான்.

"இந்தாய்யா, இப்போது உளறின மாதிரி எதையாவது எடிட்டரிடம் உளறிக் கொண்டிருக்காதே. ஆபத்து" என்று எச்சரித்தார் முருகானந்தம்.

சாமிநாதன், ஓர் அசட்டுச் சிரிப்பை உதிர்த்துவிட்டு முரளியின் அறையை நோக்கி விரைந்தான்.

முரளியின் மேஜைமீது ஒரு ஃபைலை வைத்து விட்டுப் பக்கத்தில் நின்றான். முரளி அதைப் புரட்டிப் பார்த்தான். 'பாரதமணி'ப் பத்திரிகையின் வரவு செலவுக் கணக்குப் பற்றித் தணிக்கையாளர் அனுப்பியிருந்த அறிக்கை அது. 'பாரதமணி'யின் விற்பனை குறைந்து வருவதையும், விரைவில் விற்பனையை அதிகரிப்பதற்கான முயற்சியில் ஈடுபடவில்லையென்றால் ஓராண்டுக்குள் பொருளாதார நிலையில் நெருக்கடி ஏற்பட்டுவிடும் என்பதையும் 'ஆடிட்டர்' குறிப்பிட்டிருந்தார்.

அதைப் படித்ததும் முரளிக்கு மனத்தில் ஆயாசம் தோன்றியது. கவலையுடன் தலைநிமிர்ந்த முரளி, தன் பக்கத்தில் சாமிநாதன் இன்னும் நின்றுகொண்டிருப்பதைக் கவனித்தான்.

"இது எப்போது வந்தது?" என்று கேட்டான்.

"மத்தியானந்தான் வந்தது."

"புது அச்சு இயந்திரத்துக்கு 'ஆர்டர்' கொடுத்து முன் பணமும் கட்டியாகி விட்டது. எப்படியும் ஒரு மாதத்துக்குள் ஐம்பதினாயிரம் ரூபாய் புரட்டியாக வேண்டுமே?" என்று முனகினான் முரளி.

"இந்தக் கட்டடத்துக்குச் சொந்தக்காரர் செட்டியார் வந்தார்" என்றான் சாமிநாதன். அவனைச் சோர்வுடன் தலைநிமிர்ந்து பார்த்தான் முரளி.

"இரண்டு மாத வாடகை, ரூபாய் எண்ணூறு பாக்கியாம். நாளைக்கு 'செக்' அனுப்பும்படி சொன்னார்" என்றான் சாமிநாதன்.

முரளி, பதில் ஏதும் சொல்லாமல் பெருமூச்சு மட்டும் விட்டான். சாமிநாதன் தொடர்ந்து சொன்னான்.

"'பாரதமணி'யில் விளம்பரம் கொடுத்தவர்களில் பயர், 'காலைக் குரலி'ல் கொடுக்கத் தொடங்கி விட்டார்கள். நமக்குக் கொஞ்சம் குறைந்து விட்டது."

"பீடிக் கம்பெனி சாயபு ஒரு மாதத்துக்கு விளம்பரம் அனுப்புவதாகச் சொன்னாரே. போய்ப் பார்த்தாயா?"

"காலையில் போனேன். இரண்டு நாட்களுக்குத்தான் கொடுத்திருக்கிறார்!"

"ஏனோ?"

"'காலைக் குரல்'தான் அதிகமாக விற்பனை ஆகிறதாம். அதனால் அதற்கு முப்பது நாள் விளம்பரம் கொடுத்து விட்டாராம்" என்றான் சாமிநாதன்.

முரளி தன் நெற்றியைத் தடவிக் கொண்டான்.

மேஜை மீது கிடந்த வரவு செலவு பற்றிய அறிக்கையின் மீது மீண்டும் அவன் கவனம் சென்றது. அதைப் பார்க்கப் பார்க்க அவனுடைய மனம் வலியெடுத்தது. உள்ளூறக் கோபம் மூண்டது. தரம் கெட்டதையே அதிகமாய் விரும்பும் சமுதாயத்தையே பூண்டோடு நாசம் செய்துவிட வேண்டும் என்னும் ஆத்திரம் மனத்தில் புகைந்தது.

"...எதிர்நீச்சல் போட முடியுமா? தண்ணீரின் இழுப்போடு நாமும் போகத்தான் வேண்டும். அப்போது தான் பிழைக்க முடியும்..."

'ஜீப்'பில் ராஜரத்தினம் சொன்னது நினைவில் வந்து மோதியது. மனக் கசப்பினால் முகத்தைச் சுளித்துக் கொண்டான்.

டைப்பிஸ்ட் ப்ரேமா, உள்ளே வந்து அசோக் ஸ்டுடியோ அதிபர் நமசிவாயம் அனுப்பிய ஆள் வந்திருப்பதாகச் சொல்லி விட்டுச் சென்றாள். சற்று நேரத்தில் ஒரு பருத்த கரிய உருவம் தொந்தியை முன்னே தள்ளிக் கொண்டு அறைக்குள் நுழைந்தது. சாமிநாதன் ஒரு நாற்காலியை எடுத்து மேஜைக்கு முன்னால் போட்டான்.

"வணக்கம்" என்றார் வந்தவர்.

"வாருங்கள், என்ன விசேஷம்?"

சாமிநாதன் குறுக்கிட்டான்: "நமச்சிவாயம் புதிய படத்துக்கு நாலு விளம்பரம் தரேன்னு சொல்லியிருந்தார். அது சம்பந்தமாகத்தான் வந்திருக்கிறார் மிஸ்டர் சந்திரமோகன் என்று நினைக்கிறேன். அப்படித்தானே, ஸார்?"

"ஆமாம்" என்றான் சந்திரமோகன். "முழுபக்க விளம்பரம் ஒன்றும், மூன்று அரைப் பக்கமும் 'ரிஸர்வ்' பண்ணிட்டு வரச் சொன்னார் முதலாளி."

"ஆகட்டும், குறித்துக் கொள்கிறேன்" என்றான் முரளி. "எந்தெந்தத் தேதியில் இருக்க வேண்டும்!"

"அதுக்கு முன்னாடி...."

"என்ன தயக்கம்! அதுக்கு முன்னாடி என்ன?"

"நேற்று உங்க ஆபீஸிலேயிருந்து முருகானந்தம் என்கிறவர் வந்து நாங்க எடுத்திருக்கிற புதுப் படத்தைப் பார்த்தார். விமரிசனம் எழுதியிருந்

## கம்ப்யூட்டருக்கு இன்னெரு உபயோகம்!

'சினிமாவுக்குப் போக எவ்வித சிங்காரமான ஆடை அணிவது? கடற்கரைக்குப் போகும்போது, கவர்ச்சிகரமாக எந்த ஆடை உடுத்துவது?' என்று பெண்கள் முடிவு எடுப்பதற்குள் போதும் போதும் என்றாகிவிடும் நமக்கு. இவ்வித பெண்களுக்கு உதவி செய்ய, புதுவிதமான கம்ப்யூட்டர் சாதனத்தை ஜெர்மன் ''சீமன்ஸ்'' கம்பெனியார் தயாரித்து இருக்கிறார்கள். பெண்ணின் வயது, தலை மயிர் நிறம், அங்கங்களின் அளவுகள், கண் நிறம், பழக்க வழக்கங்கள், பாஷன் பற்றிய கருத்துக்கள் போன்ற தகவல்களைக் கம்ப்யூட்டரில் செலுத்தினால், பிறகு குறிப்பிட்ட நிகழ்ச்சிக்கு எவ்வித ஆடை அணிய வேண்டும் என்பதனை கம்ப்யூட்டர் சொல்லுகிறது. அத்துடன் உடல் அழகைப் பாதுகாப்பதற்கான வழி முறைகளையும் எடுத்துரைக்கிறது. இவற்றைக் கச்சிதமாக அச்சிட்டு வழங்கி விடுகிறது. (பூ.பி.எஸ்.)



தால் ஒரு புரூப் வாங்கிட்டு வரச் சொன்னர் முதலாளி.''

குபீரென்று முரளி சிரித்தான். ''ஏன் ஸார்? பெரிய பத்திரிகைகளிடம் போய் இப்படித் தைரியமா கேட்பீர்களா நீங்க? 'பாரதமணி' போன்று கொஞ்சம் சின்னப் பத்திரிகை என்ருல் அவ்வளவு இளப்பமா?''

சாமிநாதன் சொன்னுன்: ''விமர்சனம் பாராட்டி எழுதியிருந்தால் சரி; இல்லேன்னு கொடுக்கிறதாகச் சொன்ன விளம்பரத்தை நிறுத்திப்பிடுவாங்க.... அதுக்காகத்தானே ஸார், புரூப் கேட்கிறீங்க?''

''அப்படித்தான் வைச்சுக்கிடுங்களேன்; உங்க பதில் என்ன? அது தான் எனக்கு வேண்டும்'' என்ருன் சந்திரமோகன்.

மேஜை மீது கிடந்த வரவுசெலவுக் கணக்கைப் பற்றிய அறிக்கையின் மீது முரளியின் பார்வை பதிந்திருந்தது. காற்றில் அது சலசலத்தது. முரளியைப் பார்த்து மிரட்டுவதுபோல் இருந்தது. சிறிது நேரம் அதையே வெறிக்கப் பார்த்தான். வேதனையால் நெற்றி சுருங்கியது. பக்கத்தில் நின்ற சாமிநாதனைத் திரும்பிப் பார்த்தான்.

''சாமிநாதன்.... நீ என்ன சொல்லுகிருய்?'' என்று அசிரத்தையோடு கேட்டான் முரளி.

சாமிநாதன் திடுக்கிட்டுத் திகைத்தான். இப்படி ஒரு கேள்வி தன்னை நோக்கிப் பாயும் என்று அவன் எதிர் பார்க்கவேயில்லை. பிறகு ஒரு முடிவுக்கு வந்தவனாய், ''விளம்பரமும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம்! வெளியே அனுப்புங்க ஸார், இவனே!'' என்று கோபமாக இரைந்தான் சாமிநாதன். அவனுக்கு உடல் வியர்த்துக் கொட்டியது. கூடவே, ஏதோ பெரிய பாரம் இறங்கி விட்டாற்போல் இருந்தது.

வெளியே அவர்கள் அனுப்பும்வரையில் சந்திரமோகன் காத்துக் கொண்டிருக்கவில்லே. 'விருட்'டென்று எழுந்து போய் விட்டான்.

முரளியின் முகம் மலர்ந்தது. சந்திரமோகன் உருவம் மறைந்ததும் முரளி, சாமிநாதனின் கைகளை வாஞ்சையுடன் பற்றிக் கொண்டான்.

''நீ இப்படிச் சொல்வாய் என்று எதிர்பார்க்கவே யில்லே'' என்று கூறியிருந்த உணர்ச்சிப் பெருக்குடன் சாமிநாதனின் கைகளை அழுத்தினன். முரளியின் பெருமித உணர்ச்சி, சாமிநாதனைச் சிலிர்க்க வைத்தது. ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான்.

''சார், ஏராளமான ரூபாய் போய் விட்டது... நாலு பக்க விளம்பரம்!'' என்ருன் சிறிது ஏக்கத்துடன்.

''பாரதமணியின் மானம் பிழைத்து விட்டது'' என்ருன் முரளி, உற்சாகத்துடன். பிறகு அந்த அறையை விட்டு வெளியே வந்தான். சாமிநாதனும் தொடர்ந்து வந்தான்.

இருவரும் மாடியிலிருந்து கிழிறங்கி வாசலில் நின்ற காருக்குப் பக்கத்தில் வந்து நின்ருர்கள்.

''உன்னே எவ்வளவு சாதாரணமாக நினைத்திருந்தேன். நான் நினைத்தது தவறு என்று இப்போது உணர்கிறேன். 'பாரதமணி'யின் மானத்தையே காப்பாற்றிவிட்டாயே!'' என்ருன் முரளி, வியப்புடன்.

''சார்! என்ன இருந்தாலும் இந்தச் சமயத்தில் நாம் விளம்பரத்தைப் புறக்கணித்திருக்கக் கூடாது'' என்ருன் சாமிநாதன், தரையைப் பார்த்துக் கொண்டே.

''என்னைப் பார்த்துச் சொல்லேன், தரையைப் பார்த்துக் கொண்டு ஏன் முணுமுணுக்கிருய்......? சாமிநாதா, மனிதன் கடவுளின் அம்சம் என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு. அந்தத் தன்மை திடீரென்று வெளிப்படும். உடனே அதைப் பற்றிக் கொள்ள வேண்டும். மீண்டும் சைத்தானின் பிடிக்குள் சிக்கிவிடக் கூடாது. சற்று முன் சந்திரமோகன் எதிரே நீ வெளிப்படுத்தியவையே அந்தத் தெய்வீகத்தன்மை. அதிலிருந்து ஒரு நாளும் இறங்கி

# சமயபுரம் மாரியம்மன் கோயில்
# மஹாகும்பாபிஷேகம்
## நாள்: 4-12-1970



தென்னகத்தின் பிரசித்தி பெற்றதும் வேண்டுவோர்க்கு வேண்டுவன அருள்பாலிக்கும் பிரார்த்தனை ஸ்தலமான சமயபுரம் ஸ்ரீ மாரியம்மன் ஆலய மஹாகும்பாபிஷேகம் சாதாரண வருடம் கார்த்திகை மாதம் 19ந் தேதி 4-12-70 வெள்ளிக்கிழமை காலை 6-30 மணிக்கு நடைபெறும். ஷெ ஆலயத் திருப்பணி ரூ. 10 லக்ஷம் செலவில் மேற்கொள்ளப்பட்டு நடைபெற்று வருகிறது. மேற்படி திருப்பணிக்கு நிதிதேவையாக உள்ளதால் பக்தர்கள் அனைவரும் இவ்வரிய வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொண்டு தாராளமாக நிதியைப் பண அஞ்சல் மூலமோ, காசோலை மூலமோ, "செயலர் & பொருளர், சமயபுரம் ஸ்ரீ மாரியம்மன் திருப்பணிக் குழு, சமயபுரம்" எனும் முகவரிக்கு அனுப்புமாறும், நேரிடையாக நன்கொடை செலுத்துவோர் ஆலயத் திருப்பணி அலுவலகத்திலுள்ள இணைச் செயலாளரிடம் செலுத்தி ரசீது பெற்றுக் கொள்ளுமாறும், வேறு யாரிடமும் நன்கொடைகளைக் கொடுக்க வேண்டாமெனவும் தெரிவிக்கப்படுகிறது.



ஷெ ஆலயத் திருப்பணி நன்கொடை தொகைக்கு வருமான வரி விலக்கு உண்டு.

பொதுமக்கள் அனைவரும் தாராளமாக திருப்பணிக்கு நன்கொடை வழங்கி ஸ்ரீ மாரியம்மன் அருளுக்குப் பாத்திரராகும்படி கேட்டுக் கொள்கிறோம்.

இங்ஙனம்

**V. முருகன்**
செயலர் & பொருளர்

**N. R. லிங்கமராஜா** B.A.
இணைச்செயலர்

**திருமுருக கிருபானந்தவாரி**
தலைவர்
திருப்பணி & கும்பாபிஷேகக் குழு

# ஆறு கைகள் இருந்தாலும் போறாது போலிருக்கே!

## ஒரு Prestige பிரஸ்டிஜ் பிரஷர்குக்கர் வாங்கிவிடுங்கள்!




**பிரஸ்டிஜ் பிரஷர்குக்கர் உங்கள் பொன்னான சமையல் நேரத்தில் ஒருமணி மிச்சமாக்குகிறது**

சமையல் பிரச்சனையை எளிதாக்கவே தயாராகிறது பிரஸ்டிஜ் பிரஷர்குக்கர். பிரஸ்டிஜ் சமையல் வழக்கமான சமையலுக்கு ஆகும் நேரத்தில் கால்பங்கு நேரத்திலே தயார். அது எளிதானது அத்துடன் பத்திரமானதும்கூட. 12 வயது சிறுமி கூட சமைக்கலாம். எரிபொருள் செலவில் எத்தனையோ மிச்சம். பிரஸ்டிஜ் இருந்துவிட்டால் சமைக்கும்போது குழப்பமோ, தடுமாற்றமோ இருக்காது. ஏனென்றால் அதில் ஒரே சமயத்தில் மூன்றுவகை சமைக்கலாம். பிரஸ்டிஜில் தயாரான உணவின் சத்து, ருசி, மணம் முதலியவை குறைவதில்லை. பிரஸ்டிஜ் ஆயுட்கால உத்தரவாதம்கொண்டது. நாடெங்கும் விற்பனைக்குப் பின்பும் பராமரிப்புக்கு வசதியுள்ள பிரஷர்குக்கர் பிரஸ்டிஜ் ஒன்றே.

பிரஸ்டிஜ் ஐந்து அளவுகளில் உள்ளன. உங்கள் குடும்பத்திற்கு தேவையான அளவை தேர்ந்தெடுத்துக் கொள்ளுங்கள்.




இந்தியாவில் பிரஸ்டிஜ் — ஏற்றுமதிக்கு ப்ரீதி

ஆடி. (பிரைவேட்) லிமிடெட், பெங்களூர்-16.

TTP-5799

விடாதே'' என்று கூறி அவனுடைய முதுகில் தட்டிக்கொடுத்துவிட்டுக் காரில் ஏறினான் முரளி.

மிகுந்த மனச் சோர்வுடன் இருந்த முரளி, எங்கே போவது என்பதைப் பற்றிய எண்ணமே இல்லாமல் காரில் ஏறிப் புறப்பட்டான். மனச்சுமை அழுத்திக் கொண்டிருந்தது. கார் மிகவும் மெதுவாகப் போய்க் கொண்டிருந்தது. தெருவின் ஒரு திருப்பத்தில் சுவரில் ஒட்டப்பட்டிருந்த 'காலைக் குரலி'ன் விளம்பரம் அவன் கண்களை உறுத்தியது. காரை நிறுத்தி, அதை முறைத்துப் பார்த்தான்.

மறு நாளிலிருந்து 'காலைக் குரலி'ல் வெளியாகப் போகும் ரசனையுள்ள பகுதிகளைப் பற்றிய விவரங்கள், ஒரு சினிமா நடிகையின் ஆபாசக் கோலத்துடன் விளம்பரப்படுத்தப்பட்டிருந்தன.

முரளி வெறுப்புடன் முகத்தைச் சுளித்தான். மனத்தில் கசப்பும், வேதனையும் மண்டின.

அந்தப் பத்திரிகை, 'பாரதமணி'யை எவ்வளவு தூரம் பாதித்து விட்டது. ஒரு வருஷத்துக்குள் மட்டமான அந்தப் பத்திரிகை வளர்ந்து விட்டது! இலட்சியத்தை விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டு 'பாரதமணி' தேய்ந்துவிட்டதே! மக்கள் எல்லோருமே தரம் குறைந்து விட்டார்களா...? எல்லாருமே மட்டமான ரசனையையும், ஆபாசப் படங்களையும், கேவலமான செய்திகளையும்தான் விரும்புகிறார்களா...? உலகத்தின் மன ஓட்டத்தை நான் புரிந்து கொள்ளாமல், 'பாரதமணி'யை எதிர்த் திசையில் செலுத்துகிறேனா....?

முரளியின் மனம் குழம்பியது. உலகம் அவனைப் பார்த்துச் சிரிப்பது போல் பிரமை தட்டியது.

பத்திரிகைத் தர்மம் என்றும், பண்பாடு என்றும் வீண் பிடிவாதத்தில் மூழ்கிச் சமுதாயத்தின் யதார்த்த நிலையை உணராது ஏமாளியாகிக் கொண்டிருக்கிறேனா....?

திடீரென்று மனம், சூனியமாகி விட்டதைப் போன்ற வெறுமை உணர்வு அவனை ஆட்கொண்டது. கண்களை இறுக மூடிக் கொண்டு முன்னால் உள்ள ஸ்டீயரிங் மீது முகத்தைப் புதைத்துக் கொண்டான்.

''என்ன எடிட்டர் சார், தூக்கமா?'' என்று யாரோ கேட்பதைக் கேட்டுத் திடுக்கிட்டுத் தலையைத் தூக்கினான். பக்கத்தில் சாரதா சிரித்தவாறு நின்று கொண்டிருந்தாள். அவளுக்குப் பக்கத்தில் இன்னொர் இளம் பெண் நிற்பதைக் கண்டதும் துணுக்குற்றான்.

'' என்ன? காரை இப்படித் தெருவில் நிறுத்திக் கொண்டு தூங்குகிறீர்கள்?'' என்றாள் சாரதா.

''தூங்கவில்லை. எதையோ எண்ணிக் கொண்டிருந்து விட்டேன்.... எங்கே இந்தப் பக்கம்?''

'' நானும், காந்தாமணியும் இந்தப் பக்கமாக வந்தோம்'' என்றாள் சாரதா.

காந்தாமணி என்ற பெயரைக் கேட்டதும் மின்சாரம் தாக்கியதைப் போல் அவன் உடல் சிலிர்த்தது. வியப்புடன் காந்தாமணியை உற்றுப் பார்த்தவாறு கைகூப்பி வணங்கினான். காந்தாமணி அடக்கமாகச் சிரித்துக் கொண்டு பதில் வணக்கம் செலுத்தினாள். முரளி, பரபரப்புடன் காரிலிருந்து இறங்கினான்.

''கல்லூரியை விட்டுச் சென்ற பிறகு, இப்போதுதான் சந்திக்கிறேன். ஆனால் பத்திரிகைகளில் உங்களைப் பற்றிய செய்திகளையும், படங்களையும் பார்த்துக் கொள்வேன்'' என்றான் முரளி.

---

## பொய்யாக் குழந்தைகள்

''பாப்பா! டிக்கெட்....எங்கே போகணும்?'' கண்டக்டர் இரு குழந்தைகளின் நெருங்கிக் கேட்கிறார்.

''டிக்கெட் வாங்கிட்டேனே?'' பெரிய பெண் பதில் சொல்லுகிறாள் மழலை மறையாத குரலில்.

''இப்பதான் பஸ்ஸிலே ஏறினே—டிக்கெட் வாங்கிட்டேங்கிறியே? எப்ப வாங்கினே?'' கண்டக்டர் சந்தேகத்துடன் கேட்கிறார்.



''காலம்பறவே வாங்கிட்டேனே ?'' — சிறுமியின் இந்தப் பதிலைக் கேட்டுக் கண்டக்டர் உள்பட பஸ்ஸிலிருந்த அனைவரும் சிரிக்கின்றனர்.

''காலம்பற வாங்கினியா? எடு பார்க்கலாம், டிக்கெட்டை!''

சிறுமி தன் மடியிலிருந்த அலுமினியப் பெட்டியைத் திறந்து நான்கு பஸ் டிக்கெட்டுக்களை வெளியே எடுத்துக் கண்டக்டரிடம் நீட்டுகிறாள். ''சாயந்திரம் ரொம்பக் கூட்டமா யிருக்கும்; டிக்கெட் வாங்கறது கஷ்டமா யிருக்கும்னு காலம்பறவே நாலு டிக்கெட் வாங்கிட்டேன், சார்!''

—ஜி. பா.

''ஆனால் உங்கள் பத்திரிகையில் மட்டும் எனக்கு இடம் கிடையாது'' என்று கூறிச் சிரித்தாள் காந்தாமணி. அவளுடைய முத்துப் பற்கள் மின்னின. அந்தச் சிரிப்பு முரளியைச் சுற்றி வளைப்பது போலிருந்தது.

''யூ ஆர் டூ மச் ஃபார் மை பேப்பர்'' என்றான் முரளி சிரித்துக் கொண்டே. காந்தாமணி 'கலீர்' என்று சிரித்தாள்.

''நீங்கள் எந்தப் பக்கம் போகிறீர்கள்?'' என்று சாரதா கேட்டாள்.

''குறிக்கோள் இல்லாமல் போய்க் கொண்டிருக்கிறேன்'' என்று கூறிச் சிரித்தான் முரளி.

'''பாரதமணி' ஆசிரியருக்குக் குறிக்கோள் இல்லை என்பதை நான் நம்பவில்லை'' என்றாள் காந்தாமணி.

முரளி அவளை உற்றுப் பார்த்தான். அவளுடைய கண்களில் தெரிந்த ஒளியும், முகத்தில் பரவியிருந்த மந்தகாசமும் அவன் மனத்துக்கு இதமாயிருந்தன.

''எங்களை வீட்டில் கொண்டுவிட முடியுமா? பஸ்ஸுக்கு வெகு நேரமாகக் காத்திருக்கிறோம்'' என்றாள் சாரதா.

''ஓ.... காரில் ஏறிக் கொள்ளுங்கள். வீட்டில் விட்டுச் செல்கிறேன்'' என்று கூறிக் கொண்டே காரின் பின்பக்கத்துக் கதவைத் திறந்தான் முரளி.

காந்தாமணியும் சாரதாவும் பின்பக்கத்தில் ஏறி அமர்ந்ததும் கதவைப் படீரென்று அறைந்து சாத்தியபோது, சாரதாவின் இடது கை சுட்டுவிரலில் கட்டு போடப்பட்டிருந்ததைக் கண்டு விட்டான் முரளி.

''இதென்ன விரலில் கட்டு?'' என்று வியப்புடன் கேட்டான்.

''இது...இது... வந்து, கத்தி நறுக்கி விட்டது'' என்றாள் சாரதா. அப்போது அவளிடம் தோன்றிய பரபரப்பையும், முக பாவத்தில் ஏற்பட்ட மாறுதலையும் முரளி கவனிக்காமல், காரின் முன்பக்கத்தில் ஏறி அமர்ந்தான்.

சாரதாவின் வீட்டை நோக்கிக் கார் விரைந்தது.

''பயங்கரவாதிகளின் கூட்டத்தில் பெண்களும் இருப்பதுதான் விசித்திரம்'' என்றான் முரளி. அவனுடைய கண்கள், அவன் தலைக்கு மேலிருந்த கண்ணாடியில் பிரதிபலித்த காந்தாமணியின் உருவத்தை உற்று நோக்கின.

காந்தாமணி களுக்கென்று சிரித்தாள். ''எடிட்டர் சாருக்கு, புரட்சி என்றால் பயம் போலிருக்கிறது'' என்றாள் அவள் மெதுவாக.

முரளிக்குக் கோபத்தில் முகம் சிவந்தது.

''பெண்களே பயங்கர நடவடிக்கைகளில் ஈடுபடும்போது, ஆண் பயப்படுவானா? ஆனால், புரட்சி என்னும் புனிதமான தத்துவத்தை நீங்கள் இப்படிச் சீரழிக்க வேண்டாம். கலகக்காரர்களுக்கும் பிறந்த நாட்டுக்குத் துரோகம் செய்யும் துரோகிகளுக்கும் புரட்சிவாதிகள் என்று பெயர்?'' என்று கேட்டுக் கொண்டே திரும்பிப் பார்த்தான். காந்தாமணியின் முகம் கன்றி விட்டது. தன்னை ஒரேயடியாகத் தாக்கி விட்டான் என்னும் உணர்வில் புழுங்கினாள். சாரதாவுக்குத் தர்ம சங்கடமாயிருந்தது. மேலும் முரளியிடம் தர்க்கம் செய்ய வேண்டாம் என்று சைகை செய்தாள். அவளுக்குத் தெரியும், முரளியிடம் தர்க்கம் செய்து மீள முடியாது என்று. ஆனால் காந்தாமணி கேட்கவில்லை. மீண்டும் பேசினாள்.

''கார்ல்மார்க்ஸ் அமைத்த பாதையில் செல்பவர்களைப் புரட்சி வீரர்கள் என்று கருதாமல் வேறு எப்படிக் கருதுவது?'' என்றாள் சற்றுக் கோபத்துடன்.

முரளி அலட்சியமாகச் சிரித்தான். பிறகு சொன்னான்:

''கார்ல் மார்க்ஸ் அமைத்த பாதை எப்போதோ அடைபட்டு விட்டதே. அவருடைய காலத்திலிருந்த நிலையைக் கொண்டு ஏதோ சிந்தித்தார். உலகமே முதலாளியின் வயிற்றுக்குள் ஜீரணமாகிக் கொண்டிருப்பதாகப் பதறினார். அவருடைய வாரிசுகள் என்று சொல்லிக் கொள்ளும் நாடுகளைவிட, அவரைப் பின்பற்றாத நாடுகளில்தான் இன்று தொழிலாளிகள் சுதந்திரத்தையும், உரிமைகளையும் சுபிட்சத்தையும் பெற்றிருக்கிறார்கள்....'' என்று கூறிய படியே காரைப் பேராசிரியர் வீட்டுக் காம்பவுண்டுக்குள் திருப்பினான். காந்தாமணி பதில் கூறாமல் கோபத்தில் பொருமினாள். கார் போர்ட்டிகோவில் நின்றதும் காந்தாமணி, காரில் இருந்து இறங்கி வராந்தாப் படிமீது ஏறி நின்றாள். அவளுடைய பார்வை முரளியின்மீதே பதிந்திருந்தது. சாரதா, காரிலிருந்து இறங்கியதும் முரளி, காரில் உட்கார்ந்திருந்தவாறே திரும்பிக் காந்தாமணியைப் பார்த்தான். புன்முறுவல் அவன் உதட்டில் நெளிந்தது. காந்தாமணியின் முகம் கடுகடுவென்றிருந்தது.

''புரட்சி வாழ்க!'' என்று கிண்டலாகக் கூறி முரளி, சிரித்தான். காந்தாமணியின் முகத்திலிருந்த கடுகடுப்பு மறையவில்லை; முரளியின் கார் அவள் பார்வையிலிருந்து மறையும் வரையில் நீடித்தது. (தொடரும்)

வண்ணத்திப் பூச்சி இறகுகளின் வண்ண ஜாலங்களைக்கூட அழகுற அச்சில் வடிக்கவே... ஆந்திரப் பிரதேஷ் காகிதம்



## ஒளிசிந்தும் வண்ணங்கள்!



தெருவாசலிலிருந்து, ''சாமி இருக்காங்களா?'' என்ற குரல் கேட்டது. மதுரை மாவட்டக் குரல். ராகப் பாணி. ஆவல் குறுகுறுப்புடன் வாசலுக்குப் போனேன்.

அறுபது வயதுக்கு மேல் இருக்கும். மூப்பை எதிர்த்துப் போராடும் ஒல்லியான உருவம். ஐந்தடி உயரம். இடையில் கறுப்புக் கரை போட்ட தட்டுச் சுற்று வேட்டி. மணிக்கட்டு வரை மறைக்கும் கைவைத்த வெள்ளைக் கதர் ஜிப்பா. இடது தோளில் சரிகைத் துவாலை. நன்றாக வெளுத்த தலைமுடி. அரையே அரைக் கால் நரை பிடித்த புதர் மீசை. உதடுகளிலும் இடைவெளிப்பட்ட பற்களிலும் அடர்ந்த வெற்றிலைக் காவி. மாநிற மேனி. இப்படி ஒருவர் முகம் மலரக் கைகளைக் கூப்பி வணங்கிக்கொண்டு நின்றார்.

''யார் வேண்டும்?'' என்று கேட்டேன்.

''உங்களைத்தாங்க பார்க்க வந்தேன். குங்குமப் பொட்டுக்கார ஐயா அனுப்பினாரு.''

''ஊரிலிருந்து வந்து விட்டாரா?''

''நேத்துத்தாங்க வந்தாரு. நானும் அவுங்க கூடத்தான் வந்தேன். இன்னைக்கு ராவுலே ரயில்லே புறப்படறேன். ஐயாதான் உங்க விலாசத்தைக் கொடுத்து, 'வந்தது வந்தே. இவரைப் போய்ப் பார்த்துட்டு ஊருக்குப் போய்யா'ன்னாரு.''

''என்ன விஷயமாக என்னைப் பார்க்கச் சொன்னார்?''

''விசேஷமா ஒண்ணும் இல்லீங்க. அவரைப் போய்ப் பாருன்னுமட்டும்தான் சொன்னாரு.''

''உங்க பேரு?''

''சொக்குப் பிள்ளே. கிராமத்திலே சின்னப் போதிலே கோமாளிக் கூத்து ஆடத் தொடங்கிப் பின்னாலே பபூன் சொக்குப் பிள்ளை ஆனேன்.''

''பெயர் கேட்ட மாதிரி இருக்கிறது. நீங்கள் எந்தக் கம்பெனியில் சேர்ந்து நடித்துக் கொண்டிருந்தீர்கள்?''

''நான் நாடகத் தொழிலை விட்டு விலகி இருபத்தைஞ்சு வருஷத்துக்கு மேலே ஆகுது. அந்த நாளிலே நீங்க என்னைப் பார்த்திருக்கிங்களோ என்னவோ?'' என்று சொல்லிச் சொக்குப் பிள்ளை என் வயதைக் கணிக்கும் பார்வை பார்த்தார்.

அவர் என் வயதை எவ்வளவாக மதிப்பிட்டாரோ, அவரே தொடர்ந்து, ''ராஜபார்ட்டு சுந்தரம் பிள்ளைகூட அஞ்சாறு வருசங்கள் இருந்தேன். அப்புறம் யார் கூப்பிட்டாங்களோ அவங்களோட போய் நடிச்சேன். ஐயா தயவுலே கிராமத்துலே ரெண்டு காணி நெலமும் ஒரு சின்ன வீடும் கெடைச்சது. தொழில்னு அலையறதை விட்டுட்டு ஊரோடே போய்ச் சேர்ந்துட்டேன். இன்னைக்கு ரெண்டு மகனுங்க தலையெடுத்துட்டாங்க. ஏதோ அந்தப் புண்ணியவான் பேரைச் சொல்லிக் கும்பிட்டுக்கிட்டுக் காலத்தை ஓட்டிக்கிட்டிருக்கேன்'' என்றார்.

சொக்குப் பிள்ளை பத்தே நிமிஷங்கள்தான் தங்கினார். அதற்குள் குமாரசாமியைப் போல போலீஸ் அதிகாரி கோடிக்கு ஒருவர் கூட இருப்பது அரிது என்பதை என் மனத்தில் பதிய வைக்கும் முறையில் பேசிக் கொண்டிருந்துவிட்டுப் புறப்பட்டார்.



# பபூன் சொக்குப் பிள்ளை

பி.எஸ்.ராமையா

நாம் சென்னைக்குத் திரும்பி வந்த செய்தியைக் குமாரசாமி எனக்குச் சாதாரண வழிகளில் அறிவித்திருக்க முடியும். சொக்குப்பிள்ளையை என்னிடம் அனுப்பியதற்கு, 'இந்த ஆளைப் பார்த்து வைத்துக் கொள்ளவும்' என்று பொருள் செய்து கொண்டேன். சொக்குப் பிள்ளை ஊருக்குப் புறப்படுவதற்கு முன் நான் குமாரசாமியைப் போய்ப் பார்த்து விட வேண்டும் என்ற எண்ணம் எழுந்து வலுவடைந்தது. மாலை நாலு மணிக்கு நான்



அவருடைய வீட்டுக்குப் போனபோது என் கணக்குத் தவறுகளில்லை என்பது தெளிவாயிற்று.

தமது அறையில் அமர்ந்து கடிதம் எழுதிக் கொண்டிருந்த குமாரசாமி என்னைக் கண்டவுடன் முகம் மலர்ந்து, பேனாவையும் தாளையும் ஒதுக்கி வைத்துவிட்டு எழுந்து, ''என் குறி தப்பவில்லை. சொக்குப் பிள்ளை புறப்படுவதற்கு முன் நீங்கள் வருவீர்கள் என்று எதிர்பார்த்தேன்'' என்றார்.

அவர் என்னை முன் கூடத்துக்கு அழைத்துச் சென்று உட்காரச் சொல்லிவிட்டு, வீட்டுப் பணியாளிடம் எனக்குக் காப்பி கொண்டு வர உத்தரவிட்டார். பிறகு எதிரில் அமர்ந்து, ''சொக்குப் பிள்ளை கடைத் தெருவுக்குப் போயிருக்கிறார். வந்து விடுவார். அவர் எப்படியோ பிறரைச் சிரிக்க வைக்கும் கோமாளி

நடிப்பில் இறங்கி விட்டார். அல்லாமல் அவர் உணர்ச்சியுள்ள உருக்கமான நடிப்பில் சென்றிருந்தால் பெரிய பெயரும் புகழும் பெற்றிருப்பார். திறமை மிகுந்த நடிகர்'' என்றார்.

''என்ன ஒரேயடியாக வெளியூரில் இரண்டு மாதங்களுக்கு மேல் டேரா போட்டுவிட்டீர்கள்?'' என்றேன்.

''திண்டுக்கல்லில் ஓர் உறவினர் இறந்த செய்தி கேட்டுப் போனேன். நான் அங்கே வந்திருந்த

செய்தி கேட்டுச் சொக்குப் பிள்ளை என்னைப் பார்க்க வந்தார்'' என்றார் குமாரசாமி.

அவருடைய கண்களில் ஒரு மின்வெட்டு அளவு சிரிப்புத் தெரிந்தது. அடுத்த இமைப்பில் அங்கே, பேச்சைத் தடம் மாற விடாமல் பிடிக்கும் சிந்தனையின் கனம் நிறைந்தது.



''நான் திண்டுக்கல்லில் சர்க்கிளாக இருந்தபோது ஏதோ இலாகா வேலையாக மதுரைக்குப் போனேன். வேலையை முடித்துக் கொண்டு திரும்ப இருந்த நேரத்தில் சொக்குப் பிள்ளை வந்து, 'இன்று இரவு தங்கி நான் நடிக்கும் நாடகத்தைப் பார்த்து விட்டுத்தான் போக வேண்டும்' என்று பிடித்துக் கொண்டார்'' என்று தொடங்கினார்.

''நாடகம் தொடங்கி ஒரு மணி நேரம் ஆகியிருக்கும். சொக்குப் பிள்ளை மேடையின் மேலிருந்து அவையிலிருந்த மக்களை வெடித்துச் சிரிக்க வைத்துக் கொண்டிருந்தார். நிலக்கோட்டை பாணி நாயக்கன் குறுக்கே புகுந்து வந்து என்னிடம், ''நீங்கதான் காப்பாத்தணும்'' என்றான். அவன் குரல் பரிதாபமாக ஒலித்தது. அவனுடைய முகம் அதைவிட அதிகப் பரிதாபமாக இருந்தது.

''எழுந்து அவனுடன் வெளியே சென்றேன். பாணி நாயக்கன், 'உங்களுக்கு வடுகப்பட்டி வடமலை நாயக்கரைத் தெரியுமாம். அவருடைய மூத்த மகள் நாகம்மாளை எனக்குக் கட்டிக் கொடுக்கப் பேசி நிச்சயமாயிருக்கிறது. இன்றிரவு முன்னேரத்திலிருந்து அவளைக் காணவில்லை. யாரோ கடத்திக்கொண்டு போயிருக்கிறார்கள். நீங்கள்தான் அவளை மீட்டு எங்கள் இரண்டு குடும்பத்தின் மானத்தையும் காப்பாற்றிக் கொடுக்க வேண்டும்' என்று சொல்லிக் கைகூப்பினான்'' என்றார்.

**வ**டமலை நாயக்கர் சித்திரைத் திருவிழாவுக்காகக் குடும்பத்துடன் மதுரைக்கு வந்திருந்தார். வெள்ளியம்பலம் தெருவில் அவருடைய உறவினர் ஒருவர் வீட்டில் தங்கியிருந்தார்கள். இரண்டு நாட்களுக்கு முன்தான் அழகர் ஆற்றில் இறங்கினார். வடமலை நாயக்கர் சில நகைகள் செய்யக் கொடுத்திருந்தார். அவற்றை வாங்கிக் கொண்டு நாளை மறுநாள் ஊர் திரும்ப இருந்தார்.

அன்று மாலையில் அவருடைய குடும்பத்துப் பெண்கள் பெருமாள் கோவிலுக்குப் போனார்கள். திரும்பி வரும்போது சின்னக்கடைத் தெரு வழியாக மேங்காட்டுப் பொட்டலைக் கடந்து தெற்குச் சித்திரை வீதியிலிருந்து வெள்ளியம்பலம் தெருவில் நுழைந்தார்கள். வீட்டு வாசலை அடைந்தபோது பின்னால் வந்து கொண்டிருந்த நாகம்மாளைக் காணவில்லை. அவருடைய தாயும், கடைசித் தங்கையும் தெரு முனைக்குப் போய்த் தேடினார்கள். காணவில்லை. வீட்டுக்கு விரைந்து உறவு மனிதர்களிடம் சொன்னார்கள். அவர்கள் மூலைக்கு ஒருவராக ஓடி, ஒரு மணி நேரத்துக்குப் பிறகு, நாகம்மாள் என்ன ஆனாள் என்றே தெரியவில்லை என்று சொல்லிக்கொண்டு திரும்பி வந்தார்கள்.

வடக்கு வெளி வீதியில் ஓர் உறவினரைப் பார்க்கப் போயிருந்த வடமலை நாயக்கர் திரும்பி வந்து செய்தி கேட்டுப் பதறிப் போய் எங்கெல்லாமோ ஓடியாடித் தேடினர். பலனில்லை. அவர் நேரே டி. எஸ். பி. துரையிடமே போய் முறையிட்டார்.

வடமலை நாயக்கரின் நிலங்களில் ஒரு பகுதி பக்கத்துப் பொங்குவனம் ஜமீன் எல்லையை ஒட்டியிருக்கின்றன. அதனால் அவருடைய ஆட்களுக்கும் ஜமீன் ஆட்களுக்கும் இடையில் இரண்டு மூன்று தடவை தகராறுகள் எழுந்து, ஒரு தடவை அடிதடிக் கலகமாகவே முற்ற இருந்த நிலைமையில் போலீசார் தலையிட்டு ஏதும் விபரீதம் விளைந்து விடாமல் தடுத்தார்கள்.

ஒரு வருஷத்துக்கு முன் ஜமீன்தார் நாகம்மாளைத் தமது இளைய மகனுக்குப் பெண் கேட்டு ஒரு கலியாணத் தரகரை அனுப்பினர். வடமலை நாயக்கர், ''உங்க ஜமீன்தார் என் நிலங்களை ஒவ்வொரு முழமாக விழுங்கிக் கொண்டிருப்பது போதாதென்று என் மகளையும் அடிமையாக்கிக் கொள்ள விரும்புகிறாரா? நடக்காது என்று சொல்லுங்கள்'' என்று சொல்லி யனுப்பினர்.

அந்தப் பதிலைத் தம்மிடம் வந்து சொன்னவரிடம் ஜமீன்தார், ''அவன் மகளை மட்டுமா? அவன் குடும்பத்தையே அடிமையாக்கிக் காட்டறேன் பாரு'' என்று சபதம் செய்து மீசையை முறுக்கிய தகவலும் வடமலை நாயக்கருக்கு எட்டியது.

''அவர்தான் என் மகளைக் கடத்திக் கொண்டு போயிருக்கிறார். அவருடைய மகன் கையால் அவளுக்குப் பலவந்தத் தாலி கட்டுவித்துவிட்டால் அப்புறம் அந்த நஷ்டத்தை ஈடு செய்யவே முடியாது. அதற்குள் என் மகளை மீட்டுக் கொடுங்கள்'' என்று சொல்லி வடமலை நாயக்கர் துரையிடம் கெஞ்சினார்.

டி. எஸ். பி. துரை மதுரை சர்க்கிள் இன்ஸ்பெக்டர் தேவராஜனை அழைத்து, ''நாளை உதயத்துக்குள் அந்தப் பெண்ணையும், ஜமீன்தாரையும் என் முன் கொண்டு வந்து நிறுத்த வேண்டும்'' என்று உத்தரவிட்டார். இன்ஸ்பெக்டர் ஆள் முஸ்தீபுகளுடன் புறப்பட்டுப் போயிருக்கிறார்.

ஆனால் பாணி நாய்க்கனுக்கு இன்னொரு திசையில் சந்தேகம் ஏற்பட்டது.

அவனுடைய தந்தை இருவேங்கட நாயக்கர் நிலக்கோட்டையில் பெரிய நிலச்சுவான்தார். அவர் தமது சொத்துக்களின்பொறுப்பை ஏற்ற தொடியிலிருந்து

டாக்டர்: மூணே நாள்தான். இந்த மருந்தையெல்லாம் வாங்கிச்சாப்பிடுங்கள். உடம்பு சரியாகிவிடும்!



# வாய்க்கும் கைக்கும் இடையில் எத்தனை போராட்டம்!

**விபத்துக்கள் சாதாரணம்: குழந்தை பாலைச் சிந்துகிறது. பால் பாட்டில் உடைகிறது. பால் பொங்கி வழிகிறது. பால் திரிந்து போகிறது. பால் வண்டி பழுதாகிறது. பூனை பாலைக் குடித்து விடுகிறது.**

## ஆனால் கைவசம் அமுல் மில்க் பவுடர் இருந்தால் நல்ல பாலுக்குப் பஞ்சமே இல்லை.

**கைக்கு எளிதான அமுல் மில்க்:** 10 டேபிள் ஸ்பூன் அமுல் மில்க் பவுடரை இளம் வெந்நீரில் விழுதாக்கிக் கொள்ளுங்கள். ஒரு லிட்டர் பாலாகும் வரை வெந்நீரைச் சேருங்கள். ஒரு கோப்பை பாலுக்கு 2½ டேபிள் ஸ்பூன் அமுல் மில்க் பவுடர் உபயோகியுங்கள்.

**கெட்டியான ஆடைத் தயிர்:** அமுல் மில்க் பவுடரிலிருந்து தயாரித்த பாலைக் கொதிக்கும் வரை சூடாக்குங்கள். வெதுவெதுப்பு நிலைக்கு குளிர விடுங்கள். ½ அல்லது 1 டேபிள் ஸ்பூன் நல்ல தயிரை சேர்த்துக் கிளறுங்கள். அப்படியே தோய விடுங்கள்.

**இனிப்புப் பண்டங்களும், புட்டிங் வகைகளும்:** அல்வா, கீர், மில்க் ஷேக், குலாப் ஜாமுன், கேக் வகைகள், சாக்லெட் ஃபட்ஜ், புட்டிங்குகள், கஸ்டர்டு மற்றும் நீங்கள் விரும்பும் இனிப்புக்கள் யாவையும் அமுல் மில்க் பவுடர் கொண்டு தயாரியுங்கள். அது சிக்கனமானது. திரவப்பாலாகவும் உபயோகிக்கலாம். அல்லது கேக், பான் கேக், குலாப் ஜாமுன் கலவைகளுடன் பவுடராகவும் சேர்க்கலாம். ஒன்றிரண்டு ஸ்பூன் சேர்த்தால் கறி, கூட்டுகள் கெட்டியாகவும் சுவையுடனும் திகழும்.




**அமுல் மில்க் பவுடர்**
வீட்டிலே பால் பண்ணை இருப்பதற்கு ஈடு ASP/AMP-6

அந்தத் தாலூக்கா முழுவதையும் வளைத்துக் கட்டிக்கொள்ளும் ஆசையுடன், தாமே வலியப் போய் அக்கம் பக்கம் விவசாயிகளுக்குக் கடன் கொடுத்து வட்டிக்கு வட்டி கணக்குப் போட்டு அவர்களுடைய நிலங்களை யெல்லாம் பறித்துக் கட்டிக் கொண்டிருந்தார். அதற்காக அவர் ஒரு கூட்டம் அடி ஆட்களைச் சேர்த்து வைத்திருந்தார். கோர்ட்டுக்குப் போக நேரும் விவகாரங்களுக்காக இரண்டு பெரிய வக்கீல்களை நிரந்தரமாக அமர்த்தி யிருந்தார். அந்த வட்டாரத்து அரசாங்க அதிகாரிகளுக்கு நிலை தனங்கள் படைத்து அவர்களைக் கைப்பிடிக்குள் வைத்திருந்தார்.

அதனால் அவருக்கு ஊர் முழுவதும் பகை இருந்தது. அவருக்கு எப்போது அடி சறுக்கும், பெரிய கல்லாகத் தூக்கிப் போட்டு ஆளை ஒரேயடியாக அமுக்கிவிடலாம் என்று பகைவர்கள் தருணம் பார்த்திருந்தார்கள்.

அவர்களில் ஆனைப்பட்டி மாடசாமித் தேவர் முக்கியமானவர். மகா முரடர். எதற்கும் துணிந்தவர்.

அவருடைய தூண்டுதலினால் திருவேங்கட நாயக்கரின் பங்காளிகள் அவருடன் பகைமைப்பட்டுக் கோர்ட்டில் வம்பு வழக்குகள் தொடர்ந்தார்கள். அப்போது கூட மதுரைக் கோர்ட்டில் ஒரு வழக்கு நடந்து கொண்டிருந்தது.

திருவேங்கட நாயக்கரை அவமானப் படுத்துவதற்காக அவருடைய மகனுக்குப் பேசி வைத்திருந்த பெண்ணைப் பங்காளிகளில் ஒருவனுக்குக் கட்டி வைத்துவிடும் நோக்கத்துடன் தேவர்தான் நாகம்மாளைக் கடத்திக் கொண்டு போயிருக்க வேண்டுமென்று கருதினான் பாணி நாயக்கன்.

''அப்படி நடந்துட்டா எங்க ஊரிலே வெட்டுப் பழி குத்துப் பழி கலகம் மூண்டுடும். அப்புறம் நான் மனுசனா நிமிர்ந்து நடக்க முடியாது. உங்க ஒருத்தராலேதான் அவளை அப்படி நேராமே காப்பாத்தி மீட்க முடியும்'' என்று சொல்லி அவன் கைகூப்பினான்.

குமாரசாமி, ''வடமலை நாயக்கர் மகளைப் பொங்குவனம் ஜமீன்தாரைத் தவிர வேறு யாராவது வந்து கேட்டார்களா?'' என்று கேட்டார்.

பாணி, ''யார் யாரெல்லாமோ வந்து கேட்டார்களாம். தெற்கே கரடிபாளையம் ஜமீனிலிருந்து இரண்டு வருஷங்களுக்கு முந்தியே வந்து கேட்டார்களாம். வடமலை மாமா மறுத்துவிட்டார். இருந்தும் ஒரு வருஷத்துக்கு முன் அங்கேயிருந்து மறுபடியும் பெண் கேட்டு ஆள் வந்தது. மறுபடியும் மறுக்கப்பட்டது'' என்றான்.

''அவ்வளவு பெரிய இடங்களிலிருந்து வந்து கேட்டதற்கு மறுத்து விட்டு வடமலை நாயக்கர் மகளை உனக்குக் கொடுக்க ஏன் முடிவு செய்தார்?''

''போன வருஷம் நான் என் தாயுடன் ஸ்ரீரங்கத்துக்குத் தரிசனத்துக்குப் போயிருந்தேன். வடமலை மாமாவும் குடும்பத்துடன் வந்திருந்தார். நானும் நாகம்மாளும் சந்திக்க நேர்ந்தது. அவ்வளவு அழகான பெண் எனக்கு மனைவியாகக் கிடைப்பாள் என்ற நம்பிக்கை இல்லை. இருந்தும் அம்மாவிடம் என் ஆசையைச் சொன்னேன். அம்மா தூண்டி நாயுடு வடுகப்பட்டிக்குப் போனார். சுப்ரதீபக் கவிராயரால் பாடப்பட்ட கூளப்ப நாயக்கர் வம்சத்தில் பெண் கொடுத்துப் பெண் எடுக்கும் அந்தஸ்துடைய குடும்பம் எங்களுடையது. நாயுடு அதை வற்புறுத்திச் சொன்னார். நாகம்மாளும் எனக்கு வாழ்க்கைப்பட விரும்பியதாக நாயுடுவுடன் போய் வந்தவர் சொன்னார். மணம் நிச்சயமாயிற்று. வரும் ஆனியில் முகூர்த்தம் வைத்துக் கொள்ளலாம் என்று நாயுடு வடமலை மாமாவுக்குச் சொல்லி யனுப்பி யிருக்கிறார்.''

மகளைத் தேடி யலைந்த வடமலை நாயக்கரிடம் சின்னக் கடைத் தெருவில் அனுமந்தராயன் கோயில் சந்து வந்து கலக்கும் முனையில் இட்டிலிக் கடை வைத்திருக்கும் ஓர் அம்மாள், ''ராவு மூணேரத்துலே அஞ்சாறு பொம்பளைங்க கூட்டமா கெழக்காலே போனதைப் பார்த்தேன். கடைசியிலே போன ஒரு வயசுப் பொண்ணு கிட்ட யாரோ ஒருத்தன் வந்து பேசினான். அவ ஒரு நிமிசம் தயங்கினாப்பிலே முன்னே போறவங்களைப் பாத்துட்டு அவனோட அந்தப் பக்கமாப் போனாள். 'காலம் எப்படி ஆயிடிச்சு பாத்தியா! ஒரு வயசுப் பிள்ளே இப்படி ஒருத்தனோடே பேசிக்கிட்டுப் போகுதே'ன்னு நெனைச்சுக்கிட்டேன்'' என்றாள்.

''அதைக் கேட்டு வடமலை மாமாவுக்கு என் நினைவு வர நியாயமே யில்லை. நான் மதுரைக்கு வந்திருப்பதே அவருக்குத் தெரியாது. இருந்தும் பக்கத்திலே அன்னக்குழி மண்டபம் தெருவிலே இருக்கிற எங்கள் மனிதர்கள் வீட்டுக்கு ஓடி வந்தார். நான் அங்கேதான் இருந்தேன். எடுத்த எடுப்பிலேயே அவர், 'நாகம்மாளை நீ கூட்டி வந்தயா' என்று கேட்டதும் திடுக்கிட்டுப் போனேன். அவர் விஷயத்தைச் சொன்னதும், என் தந்தையின் பகைவர்கள்தான் சதி செய்திருக்கிறார்கள் என்று என் மனத்தில் உதித்தது. ஆனால் அதை அவரிடம் சொல்ல அவமானமாக இருந்தது. அவருடன் நானும் டி.எஸ்.பி பங்களாவுக்குப் போனேன். என் மனத்திலிருந்ததை அவர்களிடமும் சொல்லத் துணிவு வரவில்லை. ஸ்டேஷனில் நீங்கள் இந்த ஊரிலேயே இருக்கும் தகவல் தெரிந்தது. எங்கெங்கோ தேடிக்கொண்டு வந்து சேர்ந்தேன்'' என்று சொல்லி முடித்தான் பாணி நாயக்கன்.

குமாரசாமியின் மனக்குறளி மூன்றாவது திசையில் முண்டி இழுத்தது.

ஆறு ஆண்டுகளுக்கு முன் நிலத் தகராறு கலகம் நேராமல் தடுக்கப் போன போலீஸ் படையைக் குமாரசாமிதான் நடத்திச் சென்றார். அப்போது அவர் நாகம்மாளைப் பார்த்திருக்கிறார்.

அவளுடைய அழகைக் கேள்விப்பட்டுத்தான் கரடிபாளையம் ஜமீன்தார் பெண் கேட்டு ஆள் அனுப்பி யிருக்கிறார். அப்போது அவருக்கு வயது ஐம்பத்தைந்து. அவருக்கு முன்பே நான்கு மனைவிகள் இருந்தார்கள். ஐந்தாவதாகத்தான் நாகம்மாளைக் கேட்டிருக்கிறார். மகா சபலம் படைத்தவர்.

குமாரசாமி, ''பயப்படாதே. அவளுக்கு ஏதும் தீங்கு நேருவதற்கு முன் அவளை மீட்டுக் கொண்டு வர வழி பார்ப்போம். மாடசாமித்

தேவர் மதுரைக்கு வந்தால் மணிநகரம் அல்லது செல்லூரில்தான் தங்குவார். ஓர் ஆளைப் பிடித்துச் செல்லூருக்கு விரட்டிவிட்டு நீயே மணிநகரத்துக்குப் போய், அவர் இந்த ஊருக்கு வந்திருந்தாரா, இன்னும் இங்கேதான் இருக்கிறாரா என்று தெரிந்து கொண்டு கிருஷ்ண ராயர் தெப்பக்குளம் ஸ்டேஷனுக்கு வந்து சேர். நான் அங்கேதான் இருப்பேன்'' என்று சொல்லிப் பாணி நாயக்கனை அனுப்பி விட்டுப் புறப்பட்டார்.

மாரியப்பன் வீடு அருகில்தான் இருந்தது. போய் அவனைக் கூப்பிட்டு, ''ஒரு சைக்கிள் பிடித்துக் கொண்டு வண்டியூருக்குப் போய்ச் சரடிபாளையம் ஜமீன்தார் ஊரில் இருக்கிறாரா, இல்லையென்றால் எங்கே போயிருக்கிறார், எப்போது போனார் என்ற விவரங்களைத் தெரிந்து கொண்டு ஸ்டேஷனுக்கு வா'' என்று சொல்லியனுப்பிவிட்டுக் குமாரசாமி சின்னக்கடைத் தெருவுக்குப் போனார்.

இட்டிலிக் கடைக்கார அம்மாளால் அந்தப் பெண்ணிடம் வந்து பேசியவன் அடையாளங்களைச் சொல்ல முடியவில்லை. ஒரு தடவை அவனுக்கு முப்பது வயதுக்குள்தான் இருக்கும் என்றாள். பிறகு ஐம்பதுக்குக் குறைவில்லை என்றாள். அந்த நிகழ்ச்சியைப் பார்த்ததாகச் சொன்னதற்கும், வடமலை நாயக்கர் வீட்டுப் பெண்கள் கோவிலிலிருந்து திரும்பி வந்ததாகச் சொல்லிய நேரத்துக்கும் ஏறக்குறைய ஒரு மணி நேரம் வித்தியாசம் இருந்தது.

அங்கிருந்து குமாரசாமி மேங்காட்டுப் பொட்டலுக்குப் போய் அந்த எல்லையைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு நின்றபோது, ''கும்பிடறேன் எசமான்'' என்று சொல்லிக் கொண்டு சின்ன மாயன் அவர் எதிரில் வந்து நின்றான்.

அவருக்கு உளவு கொண்டு வரும் ஆட்களில் அவன் முக்கியமானவன். குமாரசாமி, ''உன்னைப் பற்றி நினைத்தேன், வந்து விட்டாய். சரடிபாளையம் ஜமீன்தாரிடம் டிரைவராக இருக்கிறானே, அவன் பெயர் தெரியுமா உனக்கு?'' என்று கேட்டார்.

சின்னமாயன், ''செல்லச்சாமிங்க, சாத்தூர்க்காரன். இன்னைக்குச் சாயந்தரம்தான் வெளக்கு வைக்கிற நேரத்துக்கு சமீந்தாரு மோட்டாக்காரு அதா அங்ஙனே நின்னுக்கிட்டிருந்ததைப் பாத்தேன்'' என்று எதிரிலிருக்கும் ஒய். எம். ஸி. ஏ. கட்டிட வாசலைக் காட்டினான்.

''காரில் யார் இருந்தது?'' என்று கேட்டுக் கொண்டே குமாரசாமி அவன் காட்டிய இடத்துக்கு நடந்தார்.

''காருக்குள்ளாற யாருமில்லீங்க. சமீந்தார் கூடவே இருப்பானே கிருதா மீசைக்கார அடி ஆளு, பாப்பையா, அவன் அங்ஙனே அந்த மொனையிலே யாருக்கோ காத்துக்கிட்டு நின்னான். அவனைக் கண்டுட்டுத்தான் நான் இங்கிட்டுத் திரும்பிப் பாத்தேன். இங்ஙனே காருக்கு மும்பக்கத்துலே செல்லச்சாமி நிக்கறதைப் பாத்தேன். கொஞ்சம் முன்னாலே, அதா அங்ஙனே சமீந்தாருக்கு ஆள் பிடிச்சுக்கிட்டு வரவன் ஒருத்தன் இருக்கானே, அதாங்க... கிஷ்ணன் கோவில் சந்துலே இருக்கான். அவனும் ஒரு பொம்பளையும் நின்னுங்க. அவங்க மூணு பேரும் பாப்பையாவையே பாத்துக்கிட்டிருந்த மாதிரி இருந்திச்சு'' என்றான் சின்ன மாயன்.

கார் அங்கே எப்போது வந்தது, எவ்வளவு நேரம் இருந்தது என்பது எதுவும் அவனுக்குத் தெரியாது. ''தேர்முட்டிக்குப் பக்கத்துலே ஒருத்தரைப் பாக்கலாம்னு இந்த வழியாப் போனப்ப எதேச்சையாப் பார்த்துட்டுப் போயிட்டேங்க'' என்றான்.

அவனை அழைத்துக் கொண்டு குமாரசாமி ஸ்டேஷனுக்குச் சென்று ஏட்டு பெருமாள் நாயுடுவைப் பிடித்துக் கிருஷ்ணன் கோவில் சந்தில் இருப்பவனைக் கொண்டுவர ஏற்பாடு செய்து கொண்டிருந்தபோது மாரியப்பன் வந்து சேர்ந்தான். அவன், ''ஜமீன்தார் ஊரிலே இல்லே. இன்னிக்கு சாயங்காலம் தான் காரிலே போனாராம். பக்கத்துலேதான் டிரைவருக்கு வீடு. அங்கே போய்க் கதவைத் தட்டினேன். அவன் மாமியார்க்காரிதான் வந்து தெறந்தா. 'ஆம்பிளைங்க எங்கே போறாங்க, எப்போ வருவாங்கங்கறதெல்லாம் எங்களுக்கு என்ன தெரியும்'னு சொன்னாள்'' என்றான்.

''என்னுடைய சந்தேகம் நிச்சயமாகிவிட்டது. அந்த ஸ்டேஷனைச் சேர்ந்த ஜவான் மருத முத்துவையும், சின்ன மாயனையும் அழைத்துக் கொண்டு போய்க் கிருஷ்ணன் கோவில் சந்திலிருந்த பசுபதியையும், கனகம் என்பவளையும் ஸ்டேஷனுக்குக் கொண்டு வந்தேன். அவனைப் பார்த்தவுடன் பெருமாள் நாயுடு, 'இப்போ உன் பேரு பசுபதியாடா?' என்று கேட்டார்.

''அவர் என்னைத் தனியாக அழைத்து, 'இவன் ஒரு முழு அறுக்கட்டை. மூணு நாட்கள் விடாம உதைத்தால்கூட உண்மையைச் சொல்ல மாட்டான்'' என்று பசுபதியைப் பற்றி எச்சரித்தார்.

''இந்த விவகாரத்தில் சம்பந்தப்பட்ட சிலர் இன்னும் இருக்கிறார்கள். ஆகையால் ஊர் பேர்களையும் மாற்றிச் சொல்லுகிறேன்'' என்று சொல்லிக் கொண்டே குமாரசாமி நிமிர்ந்து வாசல் பக்கம் பார்த்தார்.

இரண்டு கைகளிலும் பண்டங்கள் நிறைந்து வீங்கிய இரண்டு துணிப் பைகளுடன் சொக்குப் பிள்ளை வராந்தாப் படி ஏறி வந்துகொண்டிருந்தார். அவர் உள்ளே வந்தவுடன் குமாரசாமி, ''வடமலை நாயக்கர் மகள் விவகாரத்தைப் பற்றி இவருக்குச் சொல்லுகிறேன். உட்காரு'' என்றார்.

சொக்குப் பிள்ளை பைகளை ஒரு பக்கம் சுவரின்மேல் சாய்த்து வைத்துவிட்டு, அவரும் அவற்றின் பக்கத்திலேயே தரையில் அடக்க ஒடுக்கத்துடன் உட்கார்ந்தார். குமாரசாமி தொடர்ந்தார்.

''அன்றைக்கென்று அந்த ஸ்டேஷனில் திருட்டுக் குற்றத்தில் சந்தேகிக்கப்பட்ட இருவரைக் கொண்டு வந்து இரண்டு லாக் அப் அறைகளிலும் அடைத்து வைத்திருந்தார்கள். அவர்கள் இருவரையும் ஒரே அறைக்குள் தள்ளிப் பூட்டிவிட்டு, பசுபதியை மற்ற அறைக்குள் அழைத்துச் சென்று கேட்டேன். முதலில் அவன் அன்று மாலையில் மேங்காட்டுப் பொட்டல் பக்கம் போகவேயில்லை என்றான். பிறகு அந்த எல்லையில் இருந்தது மெய்தான் என்றும், அங்கே எந்தக்

# மக்களின் தேர்வு

## லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட்




லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் சாதாரண டீ அல்ல!

எல்லோருக்கும் உகந்த எல்லாச் சிறப்புகளும் இணைந்தது. இயற்கை விலையே எல்லோரும் விரும்பி ஏற்பது இது!

கெட்டியான பானம்; நிறைந்த செறிவு; சிறந்த மணம். இவை மட்டுமல்ல—ஒவ்வொரு பாக்கெட்டிலும் அதிக அளவு கோப்பைகள் கிடைக்கின்றன. பருகுவதில் ஓர் இன்பம்; பிறருக்குத் தருவதிலும் ஓர் இன்பம்!

மக்களின் தேர்வு—அதுவே லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் டீ.



**லிப்டன் என்றாலே நல்ல டீ.**

LHGC.9 TAM



"உங்கள் ஆபீஸில் எலி உபத்திரவம் அதிகமாக இருக்கு என்றீர்களே! டிபன் பாக்ஸை இதற்குள் வைத்திருக்கிறேன். பத்திரமாக எடுத்துப் போங்கள்."

காரையும் பார்க்கவேயில்லை என்றும் சொன்னான். அப்புறம், அங்கே நின்ற கார் சரடிபாளையம் ஜமீந்தாருடையது என்பதே தனக்குத் தெரியாது என்றான். பிறகு அந்த எல்லையில் தான் இருந்தது மெய்தான் என்றும், ஆனால் தனக்கும் ஜமீன்தாருக்கும் தொடர்பே கிடையாது என்றான். அப்புறம், தான் பார்த்த கார் ஜமீன்தாருடையதாயிருக்க முடியாது என்றான். ஜமீந்தாருக்கும் அவனுக்கும் அறிமுகம் உண்டு. ஆனால் அவன் அவரைக் கடைசியாகப் பார்த்து நாலு மாதங்களுக்கு மேல் இருக்கும் என்று ஒரே யடியாய்ச் சாதித்தான்.

"கனகத்தை ஸ்டேஷன் ரைட்டர் மேஜை அருகிலேயே உட்கார வைத்துக் கேட்டேன். அவன் பயத்தில் குளறிப் போய், 'எனக்கு ஒன்னுமே தெரியாது. இந்தப் பாவி பகபதி தான் நாலு நாளைக்கு முன்னே வந்து அந்தப் பெண்ணுக்கு ஜமீந்தாருக்கு வாழ்க்கைப்பட இஷ்டம்தான். அவள் அப்பன்தான் கூடாது என்கிறான். அவள் தகப்பனுக்குத் தெரியாமே புறப்பட்டு வந்துடத் தயாரா இருக்கா. நீ வேறே ஒன்னும் செய்ய வேணும். தனியா சந்தர்ப்பம் பார்த்து அவகிட்ட நான் சொல்லுறப்பலே சொல்லு. அவள் வந்துடுவாள். ஜமீன்தார் உன்னைக் கவனிச்சுக்குவார்ன்னான். மூனு நாளா தெனம் என்னைக் காரிலே கூட்டிக் கிட்டுப் போய் எங்கே எல்லாமோ காத்திருக்க வச்சான். வெள்ளியம்பலத் தெரு முனையிலே முந்தாநாளு ராத்திரி ஒம்பது பத்து மணி வரையிலே காத்திருந்தோம். இன்னிக்கு அந்தப் பொம்பளைங்க எல்லாம் கோயிலுக்குப் புறப்பட்டவுடனே இவன் ஓடி வந்து என்னைக் கூட்டிக்கிட்டுப் போனான். மேங்காட்டுப் பொட்டலண்டே காத்திருந்தோம். அதிர்ஷ்டம் போல் அந்தப் பெண் எல்லாருக்கும் பின்னாலே தனியாப் போனாள். நான் போய்க் கூப்பிட்டேன்" என்றான்.

"'என்ன சொல்லிக் கூப்பிட்டாய்?' என்று கேட்டதற்கு அவன், 'நாகம்மா'ன்னு கூப்பிட்டேன். திரும்பிப் பார்த்து நின்றாள். நான் கிட்டப் போய், 'நான் பாணி நாயக்கன் தங்கச்சி. அண்ணன் அதோ நிக்குது. உன் கிட்டே ஒரு பேச்சு சொல்லணுமாம். கூப்பிடுது'ன்னேன். அவ, 'ங்கூட என்ன பேசறதுக்கு இருக்கு'ன்னு சொல்லிட்டுத் திரும்பினாள். அப்பத்தான் பாப்பையா பின்னாலே வந்து வந்து அவளைப் பிடிச்சுக்கிட்டான். அவன் அவ மூக்குலே மயக்க மருந்தைக் காட்டியிருக்கான் போலே இருக்கு. அவள் அப்படியே துவண்டுட்டா. பாப்பையா அவளை அப்படியே நடத்துறப்பலே பிடிச்சுக் கொண்டு போய்க் காருலே தூக்கி வச்சு அவனும் ஏறிக்கிட்டான். கார் போயிடிச்சு. இந்தப் பாழாப் போனவன்தான் என்னை இதுலே இழுத்து விட்டுட்டான். எனக்கு ஒன்னுமே தெரியாது. என்னை ஜயிலுக்கு அனுப்பிடாதீங்க' என்று சொல்லி வாய் விட்டு அழத் தொடங்கி விட்டான்.

"அவனை அடக்கி விட்டுத் திரும்பினேன். பாணி நாயக்கன் வந்து, "தேவர் மதுரைக்கு வந்தே ஒரு மாதத்துக்கு மேலே இருக்குமாம். அப்படியென்றால் நாகம்மாளைப் பொங்குவனம் ஜமீன்தார்தான் கொண்டு போயிருக்க வேண்டும்" என்றான்.

"நான் 'அதைப் பற்றித்தான் விசாரித்துக் கொண்டிருக்கிறேன். நீ வீட்டுக்குப் போ. நாளைக் காலையில் இங்கே வந்து என்னைப் பார்' என்று சொல்லி அவனை அனுப்பினேன். அவன் மீண்டும் ஒரு முறை நாகம்மாளை எப்படியாவது மீட்டுக் கொண்டு வந்துவிடும்படி கெஞ்சிக் கேட்டு விட்டுப் போனான். அவன் வெளியே சென்ற போது சொக்குப்பிள்ளை ஸ்டேஷனுக்கு வந்தார். பாவம், இவருக்கு என் நிலைமை என்ன தெரியும்? 'என்னங்க இப்படி? நீங்க நாடகம் பார்க்கணும்னு வந்து ஆசையாக் கூப்பிட்டேன். வந்தவங்க அஞ்சே நிமிஷம் இருந்துட்டுப் புறப்பட்டுட்டீங்களே' என்று சொல்லிக் குறைப்பட்டார். நான், 'அதெல்லாம் அப்புறம் பேசுவோம்' என்று சொல்லி விட்டுப் பகபதி இருந்த அறைக்குச் சென்றேன்.

"ஏறக்குறைய ஒன்றரை மணி நேரம் நயமாகவும், பயமாகவும் கேட்டும் பகபதி அந்தப் பெண்ணைப் பற்றித் தனக்கு ஒன்றுமே தெரியாது என்று சாதித்தான். கனகத்தின் வாக்குமூலத்தைச் சொல்லிக் கேட்டதற்கும் அவன், 'அவ்வளவும் கட்டுக் கதை. யாரோ அவனுக்குச் சொல்லிக் கொடுத்து அப்படிச் சொல்லுகிறான்' என்றான்.

"இரவு மணி ஒன்றரையாகி விட்டது. சரடிபாளையம் ஜமீன்தார் நாகம்மாளைக் கடத்திக் கொண்டு போயிருக்கிறார் என்பது தெளிவாகி விட்டது. வடமலை நாயக்கரும், பாணியும் பயந்தது போல அவள் கழுத்தில் ஜமீன்தார் கையால் தாலியைக் கட்டிவிட்டால், அப்புறம் அவளை மீட்டும் பயனில்லாமல் போய்விடுமோ என்ற கவலை என்னை விரட்டியது. ஜமீன்தார் அவளை எங்கே கொண்டு போயிருக்கிறார் என்பது உடனே தெரிந்தாக வேண்டும். அந்த இடம் பகபதிக்குத் தெரியும். அவனிடமிருந்து அதை வரவழைத்தாக வேண்டும்.

"அவனிடம், 'உனக்குப் பத்து நிமிஷங்கள் அவகாசம் கொடுக்கிறேன். அதன்பின் நீயாக அவளை எங்கே கொண்டு போயிருக்கிறார்கள் என்பதைச் சொல்லாவிட்டால் எங்கள் போலீஸ் முறையில் உன்னிடமிருந்து அதை வரவழைக்கப் போகிறேன். நான் கையாளும் முறை ஒரு தனி ரகம்' என்று சொல்லி விட்டு வெளியே வந்தேன்" என்றார்.

"திரும்ப அவன் பழைய பல்லவியையே தான் பாடினான், 'எனக்கு ஒன்றுமே

தெரியாது' என்று. ஒரு நிமிஷத்துக்குப் பிறகு மருதமுத்து உள்ளே வந்தார். அவர் ஆறடி உயரம். வைரம் பாய்ந்த தேக்கு மரம் போன்ற உடல். பாதிக் கன்னம் வரை நீண்ட மீசை. அவருடைய குரலும் கட்டையாக, அடித் தொண்டையிலிருந்து வருவது போலிருக்கும். அவர் என்னிடம், 'உங்க பக்கத்து லாக்கப்பிலே இருக்கிறவங்க ரெண்டு பேரும் ஒரு பெரிய திருட்டுலே சம்பந்தப் பட்டவங்க. திருட்டுப் பொருளை எங்கே ஒளிச்சு வச்சிருக்காங்கிறதைச் சொல்ல மறுக்கிறாங்க. கொஞ்சம் கவனிச்சாத்தான் உண்மை வரும். நான் அவங்களைக் கவனிக்கப் போறேன். உங்களுக்குத் தொந்தரவா இருக்கும்னு......' என்று அனுமதி கேட்டார். நான், 'பரவாயில்லை. நீங்கள் உங்கள் வேலையைப் பாருங்கள்' என்றேன்.

''அவர் வெளியே போய் ஐந்து நிமிஷங்களுக்குப் பிறகு பக்கத்து அறையிலிருந்து மருதமுத்துவின் குரல் கேட்டது. 'என்னடா, சொல்லப் போறையா, இல்லையா?' என்று கேட்டார். அதைத் தொடர்ந்து பளார் பளார் என்று அறைந்த ஒலி வந்தது.

''அந்த ஒலி பசுபதியைத் தூக்கிப் போட்டதை நான் கடைக் கண்ணால் கவனித்தேன். அடுத்த அறையில் அடிபட்டவன் வாய் விட்டு அலறினான். மருதமுத்து, 'குரல் வெளியே வந்தால் குரல் வளையை நெரிச்சுப் போடுவேன். சொல்லுடா. சொல்லு' என்று சொல்லி அவனைப் படபட வென்று அறைந்தார். குத்தித் தள்ளினார். பிறகு அவன் தலையைப் பிடித்து எங்கள் பக்கத்துச் சுவரின் மேல் 'டங் டங்' என்று மோதினார்.

''பசுபதியின் நெற்றியில் குப்பென்று வியர்வை முத்துக் கட்டியது. பக்கத்து அறையில் மருதமுத்துவின் கவனிப்பு தொடர்ந்து நடந்தது.

ஒரு குத்து. முக்கல், முனகல், அலறல். அடிபட்டவன் தடாலென்று கீழே விழுந்தான். 'எழுந்திருடா, எழுந்து நில்லு. சொல்லிடறையா?' என்று கேட்டுக் கொண்டே மருதமுத்து அவனைத் தூக்கி நிறுத்தினார். மறுபடியும் கேள்விகள். அறை. குத்து. அவன் தலை சுவரில் மொட்டென்று மோதி உடலும் சாய்ந்த சத்தம் கேட்டது. அதன் பிறகு வார்த்தைகள் தெளிவாகக் கேட்காமல் அவன் ஏதோ சொன்னான். மறுபடியும் ஒரு அறை. அடிபட்டவனின் பயங்கரமான அலறல். என்னாலேயே அந்தக் கோரத்தைத் தாங்க முடியாது போல் இருந்தது. எழுந்து வெளியே போய்ப் பக்கத்து லாக்கப் பின்புறம் பார்த்தேன். அதே சமயம் அங்கிருந்து, 'வேணும் சாமி. விட்டுடுங்க. சொல்லிடறேன். அடிக்காதீங்க' என்று அடிபட்டவன் கெஞ்சி அலறிய குரல் வந்தது.

''நான் அறைக்குள் திரும்பி வந்து வேறு எங்கேயோ பார்த்துக் கொண்டு ஐந்து நிமிஷங்கள் மௌனமாக நின்றேன். மருதமுத்து ஒரு துண்டுத் துணியினால் கைகளின் மேல் இருந்த ரத்தத்தைத் துடைத்துக் கொண்டே உள்ளே வந்தார். அவர், 'பூசை விழுந்தப் புறம்தான் சொல்றேன்றான். எட்டய்யா கிட்டே சொல்லிக்கிட்டிருக்கான். இவனை எங்கிட்டே விட்டுட்டு நீங்க போங்க சார். ரெண்டே நிமிசத்துலே உண்மையைக் கக்க வைக்கிறேன்'' என்றார்.

''அதற்கு இசைவதா இல்லையா என்று தயங்கி நான் பசுபதியைத் திரும்பிப் பார்த்தேன். அவன் நாவினால் உதட்டை ஈரமாக்கிக் கொண்டான். மருதமுத்துவிடம், 'கடைசியாக ஒரு தடவை கேட்டு விடுகிறேன். இவன் சொல்லாவிட்டால் உங்களைக் கூப்பிடுகிறேன்' என்று சொல்லி அவரை அனுப்பிவிட்டு நின்றேன். பசுபதி, 'பாப்பையா கொல்லுக் கொலைக்கு அஞ்சாதவன் சார்' என்றான். அவனுடைய குரல் கிணற்றுக்குள்ளிருந்து வருவது போல ஒலித்தது.

'' 'ஜமீன்தார் பெண்ணைக் கொண்டு போயிருக்கும் இடத்தை நீதான் எங்களுக்குச் சொன்னாய் என்பது தெரிந்தால் பாப்பையா உன்னைக் கொலை செய்து விடுவான் என்றுதானே பயப்படுகிறாய்? நான் யார் தெரியுமில்லையா?' என்று கேட்டேன்.

''அவன், 'தெரியும் சார். அதனாலேதான் உங்ககிட்டே சொல்லிடறதுன்னு துணிஞ்சுட்டேன். ஜமீன்தார்கிட்டே இருந்து நீங்க என்னைக் காப்பாத்தறேன்னு வாக்குக் கொடுத்தாப் போதும் சார்' என்றான்.

''மருதமுத்து மறுபடியும் உள்ளே வந்தார். பசுபதி பரபரப்புடன் எழுந்து நின்று, 'அவரைப் போயிடச் சொல்லுங்க. என்னை அவர் கையிலே விட்டுடாதேயுங்க சார்' என்று கெஞ்சினான்.

''நான் 'வேணும்னு நானே உன்னைக் கூப்பிடறேன். போய்யா, வெளியே' என்று கோபமாகப் பேசி மருதமுத்துவை வெளியே அனுப்பினேன். மீண்டும் ஒரு முறை அவனைக் காப்பாற்றுவதாக என்னிடம் உறுதி வாங்கிக் கொண்டு பசுபதி, 'சாத்தூருக்குப் பக்கத்திலே கமலைமேட்டுப் பட்டியிலே ஒரு தோட்டத்து வீட்டுக்கு அவளைக் கொண்டு போயிருக்காங்க. ஊரிலேருந்து தெற்கே ஒன்றரை மைல் தொலைவிலே இருக்கு தோட்டம். இதை நான் சொன்னேங்கிறதை மட்டும் சொல்லிடாதீங்க சார்' என்றான்.

''பெருமாள் நாயுடுவை நான் அறைக்குள் அழைத்து, 'இவனும் அந்தப் பெண் பிள்ளையும் இங்கேயே இருக்கட்டும். மருதமுத்துவை நான் என்னுடன் அழைத்துக் கொண்டு போகிறேன். இவர்களுக்குக் காலையில் காப்பி பலகாரம் வாங்கிக் கொடுக்கச் சொல்லுங்கள். யாரும் இவர்கள் பக்கத்திலேயே வரக் கூடாது' என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டுப் புறப்பட்டேன்.

''மேலும் அரை மணி நேரத்தில் முத்துக் கருப்பன் செட்டியார் காரைக் கேட்டு எடுத்துக் கொண்டு புறப்பட்டேன். அந்த நாளில் நல்ல திறமை வாய்ந்தவன் என்று பெயர் பெற்ற டிரைவர். துணிச்சலும் உள்ளவன். காரை முழு வேகத்தில் விரட்டினான். அப்படியும் நாங்கள் சாத்தூரை அடைந்த போது காலை மணி எட்டேகால் ஆகிவிட்டது. கமலை மேட்டுப்பட்டியைக் கடந்து சென்று தோட்டத்துக்கு ஒரு பர்லாங் தூரத்தில் காரை நிறுத்திவிட்டு இறங்கி ஓடினோம்.

''இன்னும் ஒரு ஐந்து நிமிஷம் கழித்துப் போயிருந்தால் நாகம்மாள் கழுத்தில் ஜமீன்தார் கையால் தாலி ஏறியிருக்கும். அதை

# அதிகமான இழுக்கும் சக்தி
# எந்த மண்ணிலும்...எப்பருவத்திலும்

# எஸ்கார்ட் 37

கடினமான மண்ணோ, உலர்ந்த அல்லது ஈரமண்ணோ எதுவாக இருந்தாலும் சரி, வெயில், குளிர் அல்லது புழுக்கமான காலத்திலும் கூட, தனது 35 ஹெச் பி. இழு திறனை உங்களுக்கு முழுமையாக வழங்குவதற்கென்றே உருவாக்கப்பட்டது எஸ்கார்ட் 37. எனவே தன்வகையில் உள்ள மற்றெந்த டிராக்டர்களையும் விட அதிகமான இழுப்புச் சக்தியை சீராக வழங்குகிறது எஸ்கார்ட் 37.

**ESCORT 37**

**உன்னதமான எஸ்கார்ட் சேவை**

நீங்கள் வாங்கும் ஒவ்வொரு எஸ்கார்ட் 37 டிராக்டருக்கும் நாடெங்கிலும் உள்ள விற்பனையாளர்களின் உன்னத சேவை கிடைக்கிறது. இந்த விற்பனையாளர்களிடம் எஸ்கார்ட்ஸ் தொழிற்சாலைகளில் பயிற்சிபெற்ற என்ஜினியர்கள் உள்ளனர். நாட்டின் எப்பகுதியிலும் எஸ்கார்ட்ஸ் விற்பனையாளர்கள் இருப்பதால், உங்களுக்கு உதவி தேவைப்படும் போது, அது விரைவிலே கிட்டுகிறது.

மறவாதீர்கள். சக்தி மிகுந்த என்ஜினையுடைய எஸ்கார்ட் 37 டிராக்டருக்கு இவ்வளவு வசதிகளும் கூடவே கிடைக்கின்றன !





**எஸ்கார்ட்ஸ் லிமிடெட்**
விவசாய இலாகா,
18/4, மதுரா ரோடு, ஃபரிதாபாத் (ஹரியானா)

**அசல் எஸ்கார்ட் மாற்றுப்பகுதிகளையே உபயோகியுங்கள்.**

EST 1441-A TH

# The best mills use Nirlon yarn

NIRLON YARN is the artist in the chamaleon world of fashion. Fabrics made from NIRLON YARN are soft as swansdown, supple and rich-textured. In a dazzling array of prismatic colours.
JOY SILK MILLS highlight the pants scene with this colour-splashed suit in Lifebond fabric. NEW ORIENTAL MILLS present a slick little number in their expressive fabric.



முறையான திருமணமாக நடத்த வேண்டிய ஆட்களைக் கொண்டு வந்து சேர்த்திருந்தார் ஜமீன்தார்.

''நாகம்மாள் அப்போதும் மயங்கிய நிலையில் சுவரின் மேல் சாய்ந்து உட்கார்ந்திருந்தாள். ஜமீன்தார் அவள் எதிரில் தாலிச் சரட்டுடன் நின்றார். ஒரு புரோகிதர் மந்திரம் சொல்லிக் கொண்டிருந்தார்.

''எங்கள் திடீர் நுழைவு அங்கு கூடியிருந்தவர்களைத் திடுக்கிட்டுத் திகைத்து நிற்க வைத்தது. ஆனால் பாப்பையா மட்டும் ஒரே நொடியில் சமாளித்து இடுப்பிலிருந்து பிச்சுவாவை உருவிக் கொண்டு முன்னே வந்தான். நான் முன்கூட்டியே அவனைப் பற்றிச் சொல்லி எச்சரித்திருந்தும் மருதமுத்து முரட்டுத் துணிச்சலுடன் அவன் மேல் பாய்ந்து விட்டார். அதில் அவருக்கு இடது கை முண்டாவில் அரை அங்குல ஆழம் கத்திக் குத்துக் காயம். அவ்வளவுதான் சேதம். கால் மணி நேரத்தில் ஜமீன்தாரையும் பாப்பையாவையும் கொண்டு போய் நாங்கள் போன காரில் ஏற்றினேன். மருதமுத்துவும், மற்றவர்களும், நாகம்மாளுடன் ஜமீன்தார் காரில் ஏறினார்கள். நான் செல்லச்சாமியைத் தனியாக அழைத்து, 'நல்லபடியாகக் காரை ஓட்டிக் கொண்டு வந்தால் உனக்குப் பெரிய தண்டனை கிடைக்காமல் காப்பாற்றுகிறேன். என்ன சொல்லுகிறாய்?' என்று கேட்டேன். அவன் இசைந்தான்.

''நாங்கள் மதுரைக்குத் திரும்பியபோது பகல் இரண்டு மணி ஆகிவிட்டது. ஜமீன்தார் காரை முன்னால் விட்டு நான் பின்னாலேயே வரவேண்டியிருந்தது. ஜமீன்தாரிடம், 'நீங்கள் தொந்தரவு கொடுக்காமல் வந்தால் நல்லது. இல்லையென்றால் உங்கள் கைகளில் விலங்கு பூட்டி மதுரைத் தெருக்களில் நடத்திக் கொண்டு போவேன்' என்று எச்சரித்திருந்ததால் அவர் பெட்டிப் பாம்பாக அடங்கி வந்தார்.

''மதுரையில் டி. எஸ். பி. பெரிய குளறுபடி செய்து வைத்திருந்தார். நான் போய் நாகம்மாளை மீட்டுக் கொண்டு வந்துவிட்டதாகச் சொன்னவுடன் அவர், 'கர்படியாளையம் தான் அவளைக் கடத்திக் கொண்டு போயிருப்பார் என்று உனக்குத் தோன்றியவுடன் ஏன் என்னிடம் வந்து சொல்லவில்லை' என்று கோபித்துக் கூச்சல் போட்டார்.

''ஜமீன்தாரைத் தப்ப வைத்து மற்றவர்களுக்கு மட்டும் தண்டனை கிடைக்கும்படி செய்யவும் முயற்சிகள் நடந்தன. ஒன்றும் பலிக்கவில்லை.

''எனக்கு டிப்டி சூப்பிரண்டெண்டாகப் பதவி உயர்வு கிடைத்தது. பாணி நாயக்கன் இவருக்குக் கிராமத்தில் நிலமும் ஒரு வீடும் எழுதி வைத்தான்'' என்று சொல்லிச் சொக்குப் பிள்ளையைக் காட்டினார் குமாரசாமி.

நான் திகைப்புடன், ''இவருக்கு எதற்காகக் கிடைத்தது? நாடகம் பார்க்க வேண்டுமென்று வற்புறுத்தி உங்களை அன்று இரவு மதுரையில் தங்க வைத்ததற்காகவா ?'' என்று கேட்டேன்.

குமாரசாமி, ''மருதமுத்துவிடம் உதையும் குத்தும் வாங்கினதற்காக'' என்று சொல்லிச் சிரித்தார்.

| |
|---|
| **6 2 2 5 7 3 5 1 4 6 2 4** |

''அதோ மேலே என்னமோ குறிச்சு வைச்சிருக்கிங்களே, என்ன நம்பர் அது? லாட்டரி டிக்கெட்டா....''

''இல்லே இல்லே. அதுதான் 1971ம் வருஷ காலண்டர்!''

''அட! அப்படியா? அதை வச்சு எப்படித் தேதி கண்டு பிடிக்கிறது?''

அதுவா?....

12 எண்களும் வரிசையாகப் பன்னிரண்டு ஆங்கில மாதங்களைக் குறிக்கின்றன.

அதில் முதல் மாதமாகிய ஜனவரி மாதம் பிறக்கும் கிழமை ஆறு - அதாவது வெள்ளியன்று ஜனவரி முதல் தேதி.

அப்படியே பிப்ரவரி, மார்ச் ஆகியவற்றுக்குத் திங்கள் என்று முதல் தேதி வருகிறது.

காலண்டர் இருந்தால் கிழிக்கக் கிழிக்கப் பழைய தேதி, மாதம் முதலியவை மறந்துபோகும். இந்தக் குறிப்பின்படி பன்னிரண்டு மாதத் தேதிகளுக்கும் (முதல் தேதியின் கிழமை தெரிவதால்) கிழமை கண்டுபிடிக்கலாம்.

ஞாயிறு முதல் சனிவரை, கிழமைகள் 1, 2, 3 என எண்களால் குறிக்கப்பட்டுள்ளன.

என்ன இருந்தாலும் ஒரு காலண்டர் மாட்டி வைப்பதுள் கவர்ச்சி இதில் வருமா என்கிறீர்களா?

தகவல்: ''தேஜ்''

---

நான் குழப்பத்துடன் அவர்கள் இருவரையும் மாறி மாறிப் பார்த்தேன். குமாரசாமி, ''பக்கத்து லாக்கப் அறையிலே மருதமுத்து திருட்டுக் குற்றம் சாட்டப்பட்டவன் எவனையும் அடிக்கவில்லை. அவனும் சொக்குப்பிள்ளையும்....'' என்றபோது சொக்குப்பிள்ளை இடைமறித்து, ''நான் சொல்றேனுங்க. ஐயா என்னைப் பேசலாம் இரு'ன்னு சொன்னாருன்னு நெனைச்சுக்கிட்டு நான் டேசன்லே காத்திருந்தேன். கெழக்கு வெளுக்கக் கொஞ்சம் இருக்கும். ஐயா லாக்கப்பிலே இருந்து வெளியே வந்தாரு. ஏட்டு, மருதமுத்து கிட்டப் பேசிட்டு இவரு என்னைக் கூப்பிட்டு 'ஒரு வேசம் போடணும் ஐயா. எல்லாரையும் சிரிக்க வைக்கற பபூன் வேசமில்லே'ன்னு விவரத்தைச் சொன்னாரு. நான் சரின்னேன். பக்கத்து ரூம்புலேருந்த ரெண்டு பேரையும் வெளியேத்திட்டு மருதமுத்து என்னை அதுக்குள்ளாறக் கூட்டிப்போனாரு. அவரு என்னைத் தான் அப்படி அடிச்சு, குத்தி, உதைச்சாரு. ஆனா நோகாமே. நான் அலறிக் கூவினேன். ரெண்டு பேரும் நாடகம் ஆடினோம்'' என்றார் பெருமை கலந்த குரலில்.

குமாரசாமி, ''இவர்கள் எவ்வளவு திறமையுடன் நடித்தார்கள், தெரியுமா? அடி, உதையின் நோவைவிட அதைப் பற்றிய பயத்தில் நெஞ்சில் எழும் வலிக்குக் கடுமை அதிகம் என்பது நான் அனுபவத்தில் அறிந்த உண்மை. அந்த அறிவைப் பயன்படுத்தினேன். மருதமுத்துவும் ஒரு சிறந்த நடிகர். இவருடன் நாடகம் ஆடிவிட்டுக் கை மேல் சிவப்பு மையைத் தெளித்து அதைத் துடைத்துக் கொண்டே அவர் உள்ளே வந்ததைக் கண்டவுடன் பயபதி பஞ்சாகி விட்டான். மருதமுத்துவுக்கும் ஏதாவது கைம்மாறு செய்ய விரும்பினார் வடமலை நாயக்கர். நான் அனுமதிக்க இயலவில்லை. மருதமுத்துவும் குறிப்பறிந்து மறுத்து விட்டார்'' என்று சொல்லி முடித்தார்.

## சிரிப்பான மிரட்டல்!



நான் சலூனுக்குக் கிராப் வெட்டிக்கொள்ளச் சென்றிருந்தேன். சலூன்காரர் பயில்வான் போல் இருந்த ஒருவருக்குக் கிராப் வெட்டிக் கொண்டிருந்தார். அந்தப் பயில்வான் முகத்தில் நல்ல கிருதா மீசை வளர்த்திருந்தார்.

சலூன்காரர் கிராப் வெட்டி முடித்தவுடன் பயில்வானைப் பார்த்து, "உங்கள் கிருதா மீசையை எடுத்துவிட்டால் உங்களை அடையாளம் தெரியாது" என்றார் விளையாட்டாக. கத்தரிக்கோலை எடுத்து, "வெட்டி விடப் போகிறேன்" என்றார்.

அதற்கு அந்தப் பயில்வான் சற்றும் தாமதிக்காமல் "பிறகு உங்களையும் தான் பிறரால் அடையாளம் கண்டு பிடிக்க முடியாது" என்றார் சிரித்தபடியே.

ரசித்தவர் :
டி. எஸ். கணேசன்

## கோடையில் கோடரிக் காம்பு!



விறகு வெட்டி தன் கோடரிக்கு மரம் வேண்டி மரத்தை யாசிக்கிறான். அந்தக் காம்பைக் கொண்டு அவன் தன்னையே வெட்டி வீழ்த்தப் போகிறான் என்பதை அறிந்தும் துணிவோடு மரம் கோடரிக்குக் காம்பு தருகிறதே. அதன் கொடை வீரத்தை என்ன வென்பது?

- ரா. வி.




இன்று வானவீதியில் நாட்கணக்கில் பலூனில் யாரும் பறக்க இயலாது. அதில் உலகப் போக்குவரத்து கட்டுப்பாடு இதைத் தடுத்துவிட்டது.

சூரியோதயத்தின்போது பலூன்மீது அமர்ந்து, பயணம் செய்யத் தொடங்கினால் சூரியாஸ்தமனத்துக்குள் பூமிக்கு வந்துவிட வேண்டும்!

மேற்கு ஜெர்மனியில் பலூன் சங்கங்கள் மொத்தம் பதினொன்று செயல்படுகின்றன. ஒவ்வொன்றிலும், ஆயிரக் கணக்கில் அங்கத்தினர்கள் இருக்கிறார்கள்.

ஒவ்வொரு சங்கத்திலும் சுமார் இருபத்தைந்து பலூன்களை வைத்திருக்கின்றனர்.

பிரம்மாண்டமான இந்தப் பலூன்கள், பூமியுடன் ரேடியோத் தொடர்பு கொண்டுதான் இயங்கி வருகின்றன.

இப்போதுள்ள சட்ட திட்டங்களின்படி, பலூன் பயணிகள், இரண்டாயிரம் அடி உயரத்திலும், மணிக்குப் பத்து மைல் வேகத்திலும், பூமியிலிருந்து பார்ப்போரின் கண்களுக்குத் தென்படும்படியாகவும்தான் பறந்து செல்லவேண்டும்.

விமானப் போக்குவரத்துக்கள் பாதிக்காத அளவில் அதிகாரிகள் ரேடியோத் தொடர்பு கொண்டு இந்தப் பலூன் பயணங்களைக் கட்டுப்படுத்துகிறார்கள்.

பலூன்களைப் பறக்க விடுவதில் போட்டிகளும் நடைபெறும். ஆஸ்டிரியா, ஸ்விட்ஜர்லாந்து ஆகிய நாடுகளிலிருந்து இப் போட்டிகளில் கலந்துகொள்ள ஜெர்மனிக்கு வருகிறார்கள்.

பயணிகள் அமர்வது பலூனுக்குக் கீழே உள்ள கூடையில். பிரசித்தி பெற்ற 'ஆல்ப்ஸ்' சிகரங்களின் மீதாகப் பலூனில் பறக்கும் அனுபவம் சொர்க்கத்துக்குப் போய் வந்தது போன்ற பேரின்பம்தான்! - ஏ. சுவாமிநாதன்

## பூனை சிங்கமாகுமா? ஏன் ஆகாது?



'எலிக்குப் பூனைதான் சிங்கம்' என்பது ரஷ்யப் பழமொழி. - மிரா-பாபு

டோக்கியோ நகரப் பூனைகள் இப்போது எலிகளைப் பிடிப்பதில்லை. பூனை வளர்ப்போர் தரும் சத்துள்ள உணவு எளிதில் கிடைப்பதால் சிரம உழைப்பின்றி அந்தப் பூனைகளுக்கு ரத்த அழுத்த நோய் வந்துவிட்டது. ஆகவே ஓடி ஆடி எலியைப் பிடிக்க முடிவதில்லை!

பேஜண்ட் - பாலி

## பத்து தலைமுறைகளே சண்டை இல்லை!

பத்து வருடங்களுக்கு முன் நார்வே நாட்டைச் சேர்ந்த புள்ளி விவர ஆராய்ச்சியாளர் ஒருவர் கம்ப்யூட்டரில் வரலாறு கண்ட போர்களைப் பற்றிய விவரங்களைத் திணித்தார். பின்னர் அவர் கேட்ட சில கேள்விகளுக்கு கம்ப்யூட்டர் தந்த விவரங்கள் : வரலாறாக வரையறுக்கப்பட்டுள்ள 5560 வருட மானிட சரித்திரத்தில் 14,531 போர்கள் நிகழ்ந்துள்ளன. ஆண்டொன்றுக்குச் சராசரியாக 2.6 சண்டை விதம் நடந்திருக்கிறது.

185 தலைமுறைகளில் சமாதானமாக இருந்தது பத்துத் தலைமுறைகள் மட்டுமே.

- சு. குழந்தைநாதன்



"நீங்கள் இருவரும் அடிக்கடி தலையை இடித்துக்கொண்டும், பேசிக்கொண்டும் இருந்தால், நான் எப்படி நிம்மதியா படம் பார்ப்பது?"



# பூநெஞ்சம்

கோமகள்

ராஜி சோர்ந்து படுத்திருந்தாள். மனத்தில் தெம்பற்ற நடுக்கம். ஆதரவற்றுவிட்டாற் போன்ற பலவீனம். நேற்று வரத் தவறிய ஒரு கடிதத்தால் அது மேலும் பெருகி நின்றது என்றால் தவறில்லை.

''அம்மா! கடிதாசு வந்திருக்கு...'' குழந்தை லலிதா ஒரு கவரை அவளிடம் கொணர்ந்து தந்தாள்.

கவரின் மேலிருந்த எழுத்து கணவனுடையதுதான் என்பதில் ஒரு திருப்தி ஏற்பட்டாலும், ஏதோ ஓர் அழுகை மனத்தை மேலும் அழுத்துகிறது. கடிதத்தைத் தலையணையில் வைத்துவிட்டு அதன் மேல் முகத்தைப் புதைத்துக்கொண்டாள். பிறகு அதை நிதானமாகப் பிரித்தாள். அதனுள் வழக்கம்போல் அவள் சோகத்துக்கும் எதிர்பார்ப்புக்கும் தெம்பளிக்கும் டானிக்மாதிரி 'கண்ணே, முத்தே' என்ற வார்த்தைகளுக்குப் பஞ்சமிராது. ஆனால் வருகை பற்றிய குறிப்பு...? அதைப் பற்றி ஒரு வரிகூட இருக்காது. இந்த வெறிச்சிட்ட வாழ்வுக்கு ஒரு முடிவாக அவன் முடிவு மாறிவிடாதா? இந்தக் கடிதம் அவன் வரவைத் தெரிவிக்கும் சுபச் செய்தியைத் தாங்கி வந்திருக்குமோ?

ஊஹூம்! வழக்கமான அன்பைப் பிரதிபலிக்கும், தைரியத்தை ஊக்குவிக்கும் சொற்கள்! ஆனால் மூன்று மாதங்களாகப் போகின்றனவே, உங்களையெல்லாம் பார்க்க வேண்டும் போலுள்ளது என்ற எண்ணத்துக்கான ஒரு சிறு பிரதிபலிப்பும் அதில் இல்லை. ச்! இந்த ஆண்களுக்குத்தான் எத்தனை கல் நெஞ்சம்! 'குபுக்'கென்று கண்களில் இரண்டு நீரை அவள் தலையணை ஏந்திக்கொண்டது.

''அம்மா, பசிக்கிறதம்மா!'' — லலிதாவும் சசியும் குரல் கொடுத்தனர்.

குழந்தைகள் பரவாயில்லை. அப்பா அருகில் இருந்தாலும், தூர இருந்தாலும் அவர்களுக்குப் பசிக்கிறது!

குழந்தைகள் தூங்கிவிட்டனர். சேகர் தூரப் படுத்திருக்கிறான். ராஜியின் அருகில் படுத்திருந்த லலிதா கால்களை அவள்மீது போட்டிருக்கிறாள். சசி கைகளை அவள் இடுப்பில் கோத்திருக்கிறான். அவளுக்குத் தூக்கம் வரும் என்றே தோன்றவில்லை. மனம் விண்டு விழுந்துவிடும் போன்ற துவளலில் விழிகள் நனைந்தன. இதற்கொரு முடிவு வருமா? அது எப்போது வரும்?

மேலும் நாட்கள் கழிகின்றன. பாங்குக்குப் போக, சாமான்கள் வாங்க, குழந்தைகளுக்கு உடைகள் தைக்க, அடிக்கடி பள்ளிக்குப் போய் வகுப்பாசிரியையிடம் தன் பிள்ளைகளின் தரத்தையும் பலவீனத்தையும் கேட்டறிந்து பாடம் சொல்லித்தர என்று மேலும் பெரிய வேலைச் சுமையின் பெருமூச்சில், அதன் பளுவை இறக்க ஒரு துணையில்லாத குறையை உணர்கிறாள் அவள். சுருதியும், லயமும் இல்லாத சங்கீதத்தில் எப்படிச் சுவை காண முடியும்?

''அம்மா! எத்தனை நாட்களாய் ஏமாத்தறே, நிச்சயம் ஸ்வீட் பூந்தி பண்ணித் தரணும்!'' சேகர் ஆரம்பிக்க, சசியும், லலியும் அவன் முகத்தின் ஆமோதிப்புக்கு வாய் திறவாமல் காத்திருப்பது புரிந்தது. பாவம் சிறுசுகள்! அந்த வீட்டுத் தலைவனுக்குப் பிடிக்கும் என்பதற்காக அங்கு அடிக்கடி செய்யப்படும் ஸ்வீட் பூந்திதான். அது செய்து எத்தனை நாட்கள் ஆகிவிட்டன?

படம் : நீனா

**என்ன ராஜி! நாமென்ன**
**புது மணத் தம்பதியா?**
**கொஞ்ச நாட்கள் பிரிஞ்சிருந்தால்**
**என்ன? என்ன வருத்தம் இதிலே?**
**'ஃபுட் ஆன் எ கோல்டன்**
**கமா' என்பார்களே அதுபோல**
**ஒரு சின்ன இனிய பிரிவு;**
**அவ்வளவுதானே!**

"சாயந்திரம் செய்து தரேன்!"

குழந்தைகள் முகத்தில் ஒரே கும்மாளம்!

மாலை மூன்று சிறு தட்டுக்களில் பூந்தியை வைத்துத் தந்தாள் ராஜி.

"அவ்வளவுதானும்மா?"

"ஆமாம். சாப்பிடுங்க."

"அப்பாக்கும்மா?" என்றான் சசி.

"அசடு! அப்பாதான் இங்கே இல்லையே?" என்றான் சேகர்.

"ஏனம்மா! அப்பாக்கு கவர்லே கடிதாக போட்டு அனுப்பறபோது பூந்தியும் போட்டு அனுப்பும்மா!" என்றாள் லலிதா.

"அம்மா! உனக்கு?"

"எனக்கு வேண்டாம்!"

"கொஞ்சம்... கொஞ்சம்மா..." சசி தன் பூங்கரத்தால் பூந்தியை அள்ளி அவள் வாயிலிடக் கொண்டு வருகிறான்.

விழிகளை மறைக்கும் கண்ணீரைக் குழந்தைகளிடம் மறைக்க எழுந்து கொண்டாள் ராஜி. மறுப்புக் கூற முடியாமல் வாயைச் சுவைத்த போது இனிப்புக் கரைந்ததும் வேறொரு நினைவில் அது கசந்தது. பூந்தி என்றால் அவருக்கு எவ்வளவு பிரியம்! ஒவ்வொன்றாய் எடுத்துச் சுவைக்கும் அவர் ரசனை! "மற்ற இத்திப்பு வகைகளைக் கடித்ததுமே விழுங்கியாக வேண்டும். ஒவ்வொன்றாய் எடுத்து நின்று சுவைக்க உதவும் இந்தப் பூந்தி!" என்ற அவர் புகழ் மாலை.

"அம்மா! நீ ஏனம்மா வருத்தப்படறே? இதே மாதிரி பூந்தியை அப்பா ஹோட்டல்லே வாங்கிச் சாப்பிட்டுவார்!" சேகர் தாயைச் சமாதானப்படுத்திய அந்தச் சொற்கள் அவளுக்குக் 'சுரீ'ரென வேறு விதமாக ஒலித்தன.

இதேமாதிரி பூந்தியை ஹோட்டல்லே வாங்கிச் சாப்பிட்டுவார். அதே மாதிரி... அதே மாதிரி... கணவன் எழுதிய ஏதோ ஒரு கடிதத்தில்... சென்னையில் வேலை பார்த்த மிஸ் மாலதிகூடப் பக்கத்து டவுனில் வேலை பார்க்கிறாள் என்ற வரிகள் காரணமின்றி நினைவுக்கு வந்தன. சீ! அவரைப் பற்றியா இப்படி நினைக்கிறேன் என்று நொந்து கொண்டாள் ராஜி.

அப்படி ஒரு கணம் கணவரைப் பற்றி எண்ணிவிட்ட துயரமே அன்று அவள் தூக்கத்தைத் தடுத்தது.

"ராஜி!"

இது என்ன பிரமையா, உண்மையா? அவள் எழுந்து உட்கார்ந்தாள்.

மறுபடியும் அதே குரல் கேட்டது. மெல்லிய கதவு தட்டும் ஒலியோடு. மகிழ்ச்சியின் பீறிடல் அவளுக்கு இதயம் குப்பென்று அடைத்தது. கதவோரம் தெருப்பக்க விளக்கின் ஸ்விச்சைத் தடவும் விநாடி யுகமாகக் கனக்கிறது. கதவின் ஒருக்களிப்பில் கையில் ஸூட் கேஸுடன் அவன் நின்றான்.

பேசத் தோன்றவில்லை ராஜிக்கு.

"என்ன ராஜி, நான் வந்ததை நம்பவில்லையா? இத்தனை நாட்களாக வரவில்லை என்று கோபமா? திடீரென இங்கு வரும் ஒரு சந்தர்ப்பத்தை நான் பயன்படுத்திக் கொண்டேன்."

"குழந்தைகளை எழுப்புகிறேனே..."

''வேண்டாம். நான் நாளை மாலையே புறப் படவேண்டும். காலையில் குழந்தைகளுடன் பேசிக் கொள்கிறேன்...''

ராஜியின் மேனி புல்லரித்தது.

''இந்த நானூறு மைல்களையும் உன் நினைவி லேயே மூழ்கிக் கடந்து வந்தேன் ராஜி. உன் பூ நெஞ்சத்தில் என் பிரிவு ஏற்படுத்திய புண்ணை ஆற்றும் நினைவு ஒன்றுடன்தான் வந்தேன்...''

சற்று முன் பிஸ்-மாலதியுடன் கணவனைச் சம்பந்தப்படுத்தி ஒரு நிமிடம் நினைத்துவிட்ட வேதனைச் சுமையோடு ''என்னை மன்னித்து விடுங்கள்!'' என்று அவன் கைகளைப் பற்றி முகத்தில் பதித்துக் கொண்டு தேம்பினாள் ராஜி.

''எதுக்கு இப்ப மன்னிப்பு என்ற பேச் செல்லாம்?'' என்று அவளை ஏந்திக் கொண் டான் வாசு.

''இந்தாங்க. உங்க பிள்ளைகளெல்லாம் பூந்தி செய் செய்யினு நுனைச்சு எடுத்துட் டாங்க. நீங்க இல்லாமல் எனக்குச் செய்யவே பிடிக்கலே. அதுதான் நீங்க வந்துட்டீங்க...''

''கொடு... கொடு. சாப்பிட்டு எத்தனை நாளாச்சு! இதைப் போல் எந்த ஸ்வீட்டும் இருக்காதே...''

அவன் ஆவலோடு சாப்பிடுவதை அவள் ஆதாரத்தோடு பார்த்திருந்தாள்.

''அணைக்கட்டு வேலை, அணைக்கட்டு வேலை என்று ஆவலோடு போனீங்களே, எப்படி இருக்கு?''

''உங்களை யெல்லாம் பிரிஞ்சிருக்கேன் கறது தவிர வேலை ரொம்ப 'த்ரில்லிங்'கா இருக்கு ராஜி!''

''காய்கிற வெய்யிலெல்லாம் உங்கள்மேல் தானே, ரொம்பக் கறுத்துட்டீங்களே?''

''வெய்யில், மழைன்னு இன்ஜினியர்ஸ் பார்த்தால் முடியுமா?''

''உம்! உங்களுக்கு என்னை விட்டுத் தூர இருக்கிறதிலே அத்தனை இன்பம்!''

''என்ன ராஜி! நாமென்ன புது மணத் தம்பதியா? கொஞ்ச நாட்கள் பிரிஞ்சிருந்தால் என்ன? என்ன வருத்தம் இதிலே...இதோ மூந்நூறு மைல்கள் தள்ளிப் போயிருக்கிறேன், என்றால் அது ஒரு பிரிவா? 'புட் ஆன் எ கோல்டன் கவர்' என்பது போலத்தானே? ஒரு சின்ன இனிய பிரிவு...!''

இரவின் தெளிந்த அமைதியில் தூரத்தே தெரியும் மின்விளக்கு வரிசைகள். பாலத்தி னோரம் தெரியும் நிழல்கள். கண்கள் அங்கே தேங்குகின்றன. மனம் அங்கே தேம்புகிறது. அதோ தூர ஒலி! பக்கத்தே இருள்...!

''என்னோட வருத்தத்துக்கு ஒரே ஒரு காரணம்தான் இருக்கும்னு நினைச்சுட்டீங்க.... எனக்கு உங்களைத் தினம் பார்க்கணும், உங்க முகத்திலே தினம் விழிக்கணும். சூரியகாந்தி பூ மாதிரி நான் முழுதும் உங்கள் வரவுக்குக் காத்திருக்கணும். அப்படி எத்தனை நாட்கள் காத்திருந்தேன். என் மன அலைப்புக்கு மருந் தாக இந்த உங்கள் வரவுதான் எனக்கு வைபவம் மாதிரி!''

வைகறையின் காலை சிலிர்ப்பில் தோயும் கனவாக இனிமை சூடும் நினைவு. ஏகாந்தத் தின் கனவுகள் கலையாத மன பத்திரத்தில் எண்ணற்ற ரகசியப் பெருமிதங்கள். கூடவே அவற்றூடே எங்கு நூலாகத் தொடரும் பிரிவு வேதனை.

''ஏன் பாயசம் வைச்சிருக்கே ராஜி? இன் னிக்கு என்ன பண்டிகை?''

''உங்களுக்காகத்தான்! நீங்கள் வந் திருக்கிறதுதான் பண்டிகை மாதிரி எனக்கு!''

''ஓ!'' என்ற அவன் குரலில் வழிந்த கேலி அவளை என்னவோ செய்கிறது.

''பின்னே என்ன? எனக்குப் பண்டிகைகள் நீங்கள் இல்லாமல் ரசிக்கவில்லை. விழாக்கள் குதூகலப்படுத்தவில்லை. பீச்சுக்கோ, சினி மாவுக்கோ போக இருந்த ஆசை யெல்லாம் குறைந்து விட்டது. ... இல்லை, வெறுத்து விட்டது!'' அவள் குரல் எத்தனை கட்டுப் படுத்தியும் தழுதழுப்பில் ஆரம்பித்து, அழு கையில் முற்றுப் பெற்றது.

''சீ! என்ன ராஜி! எதற்கெடுத்தாலும் அழுகைதானா?''

''அப்பா! என் பிறந்த நாளுக்குக்கூடப் பாயசம் வைக்கலை அம்மா!'' என்கிறான் கவி.

''ஏன் ராஜி, குழந்தைகளைச் சந்தோஷமாக வைத்திருக்கிறதில்லையா?''

''நான் என்ன செய்யட்டும்! நீங்கள் ருசிக் காத இந்தச் சாப்பாட்டைச் சமைக்கப் பிடிக்க வில்லை எனக்கு. நீங்கள் எங்கேயோ ஒரு ஹோட்டலில் சாப்பிடும்போது, நாங்கள் மட்டும் பாயசம் வச்சுச் சாப்பிடறதா?''

''நாங்கன்னு சொல்லாதே... நீ சாப் பிடலைன்னாலும் குழந்தைகளுக்குப் பண்ணிப் போடு ராஜி... நீ முன்னைக்கு இப்ப இளைச் சுட்டே. உடம்பைப் பார்த்துக்கிறதில்லை போலிருக்கு.''

**மா**லை. பிரியும் நேரம். உதட்டைக் கடித் துக்கொண்டு நிற்கிறாள் ராஜி.

''இன்னும் ஆறே மாதங்கள் பொறுத்துக் கொள் ராஜி. 'டேம் சைட்' வேலை முடிந்த தும், என்னை எந்தக் காட்டுக்கு மாற்றினாலும் உன்னையும் அழைத்துப் போறேன். சரி தானே?'' இந்தச் சமாதானத்துக்கு அவளிட மிருந்து ஒரு சிரிப்பு வருமா என்று எதிர் பார்க்கிறான் வாசு.

அந்த நாள் சீக்கிரமே வரவேண்டும் என்ற பிரார்த்தனையோடு அவள் விடை தருகிறாள்.

ஏக்கத்தின் பிரதிபலிப்போடு அவள் நாட்கள் நகருகின்றன. ஒரே இயந்திர மய மான வாழ்க்கை போய் என்றுதான் அவசர மும், பரபரப்பும் கூடி வருமோ? ஒருவருக் கொருவர் ஆறுதலான உபசரிப்பும், அன் பான மறுதலிப்புமாய் விளைய வரும் நாள் என்று வருமோ? அவளுக்கு எல்லாமே கசந் தது. உண்ணும் உணவோ, புறக்கணிப்பில் குறைந்தது. உடுக்கும் உடையோ சிரத்தைக் குறைவில் மங்கியது. நாளுக்கு நாள் அவள் மேனி கருகி வாடியது. மௌனமான புலம் பலில் தனக்குள் மறுகிச் சோர்ந்தாள் அவள்.

அன்று வாசுவின் நண்பர் சுந்தரம் வந் திருந்தார். குழந்தைகளின் கூவலையடுத்து ராஜி அவரை வந்து வரவேற்றாள்.

சுந்தரம் திகைப்புடன், ''என்ன நீங்க இப்படி இளைச்சுப் போய்... உடம்பு சரி யில்லையா?'' என்று கேட்டார்.

''ஒன்றுமில்லை. இரண்டு நாட்களாக ஜுரம். சரியாயிடும்...''

# அந்த உபரியான கதகதப்பை உங்கள் வீட்டில்




# பஜாஜ் வாட்டர் ஹீட்டர் மற்றும் ரூம் ஹீட்டர்







- தேவையான சுடுதண்ணீர் இறைத்துக் கொள்ளுங்கள்—பஜாஜ் ஸ்டோரேஜ் வாட்டர் ஹீட்டர் உதவியால்.
- குறுகிய நேரத்தில் சுடுதண்ணீர்—பஜாஜ் இமேர்ஸன் வாட்டர் ஹீட்டர் உதவியால்.
- கதகதப்பான சூரிய ஒளியின் உஷ்ணத்தில் குளிர்காயுங்கள் வீட்டிலிருந்தபடியே—பஜாஜ் ரூம் ஹீட்டர் பொருத்துங்கள்.




வாங்குமுன் கண்
அடயாளத்தைப் பார்க்கவும்.

**பஜாஜ் எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்**

45-47, வீர் நரிமான் ரோடு, பம்பாய்-1.
இந்தியாவெங்கும் கிளைகள்

'veros'-BE-59 TAM

''ரொம்ப இளைச்சுட்டீங்களே... நான் வாசுவுக்கு எழுதறேன்...''

''வேண்டாம்...'' பதறி மறுத்தாள் அவள்.

''இப்படித் தன்னந் தனியாகக் குழந்தை களோடு விட்டுட்டுப் போனதிலே வாசு மேலே கோபம் இருக்கலாம். அதற்காக எழுதாமல் இருக்கலாமா?''

''அப்படியெல்லாம் இல்லே. அவர் நான் நன்றாக இருக்கும்போதே வரட்டும். அப்போதுதான் அவர் வந்த சந்தோஷம் நீடிக்கும்!''

சுந்தரத்தின் கண்ணோரங்கள் நனைந்து விடும்போலிருந்தன. ''சரிங்க! ஏதாவது உதவி தேவைன்னு எனக்கு ஒரு போன் பண்ணுங்க!''

''ரொம்ப நன்றி!'' என்று விடை தந்தாள் ராஜி.

இரண்டு மாதங்கள் கழித்து ஒரு நாள் வாசு வந்தபோது ''சி. இ. ஆபீசுக்கா வந்தீர்கள்?'' என்றவாறே வரவேற்றாள் ராஜி.

''நீ ஏன் இப்படி இருக்கிறாய்? தினசரி உண்ணாவிரதமா?''

''கொஞ்சம் உடம்பு சரியில்லே.''

''அதைத் தெரியவர்கள் எனக்கு எழுதக் கூடாதா?''

''உங்களைத் தொந்தரவு பண்ணுவா னேன்னு...''

''ராஜி!... இது என்ன பேச்சு? ஏன் என்னைத் தூர நிறுத்துகிறாய்? இன்னும் நான் அணைக்கட்டுப் பகுதிக்குப் போன கோபம் உனக்குத் தீரவில்லே. அப்படித்தானே? ஒரு எஞ்ஜினீயருக்கு அணைக்கட்டு அனுபவம் வேண்டும் ராஜி. அதுவும் எனக்கு மசமச வென்ற ஆபீஸ் வேலை அலுத்து விட்டது. துடிப்பாக, பரபரப்பாக வேலை வேண்டும். இதெல்லாம் உனக்குத் தெரியும். இருந்தும் உடம்பு சரியில்லே யென்றால் தெரிவிப்பதில் லையா? இந்தப் பூநெஞ்சத்தில் இத்தனை வஞ்சமா ராஜி?''

''இது வஞ்சமில்லே, வாஞ்சை!''

''க்கும்! வாஞ்சையைப் பார்க்கவில்லே. ஒரு சின்னக் கடிதம். ஒரு வாரம் லீவ் எடுத்துக் கொண்டு வந்திருப்பேனே...''

''இப்போது எத்தனை நாள் லீவாம்?''

''ஒரு வாரம்.''

''அப்பா!'' ராஜி மனம்விட்டுச் சிரித்தாள். இப்போது நீங்கள் வந்திருக்கும் இந்த விடுமுறையை ரசிக்கும் அளவுக்கு அது ரசித் திருக்காது. ஏனென்றால் நீங்கள் எனக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்று எதிர் பார்க்கவில்லையே. நீங்கள் வரும் அந்த நேரங்களை மகிழ்வோடு ஒருமித்துக் களிக்கக் குழந்தைகளோடு வெளியே போக என்று இருக்க விரும்பினேன். அப்போது நீங்கள் வந்திருந்தாலும் திரும்பிப் போகும்போது உங்கள் மனத்தில்தான் எந்த சந்தோஷம் நினைத்துப் பார்க்க நீடித்திருந்திருக்கும்?''

''ராஜி! என்னைத் துணைக்கு வரவழைக்க இத்தனை தூரமா யோசித்தாய்?''

''ஆமாம்! நம்மிடையே அடிக்கடி சந்திக்க முடியாத இடைவெளி இருக்கிறதே...''




சினிமாக் கொட்டகையின் இருட்டில் அவ னுக்கு அந்த ஞாபகம் வந்து கேட்டான். ''போகட்டும் ராஜி! எனக்குத்தான் எழுத வில்லே. ஊரிலிருந்து அத்தையைத் துணைக்கு வரச் சொல்லியிருக்கலாமே...?''

''துணைக்கா? யாரையும் ஏன் அழைக் கணும்? யாரோடயும் கலந்து உறவாடற மனசு எனக்கு இல்லையே... நான் உங்களையே நினைத்து நினைத்துத் தவமல்லவா பண்ணிக் கொண்டிருந்தேன். அதை மத்தவங்க தலை யிட்டு கலைக்கடாதா?''

''ராஜி!'' என்று வாஞ்சையோடு அவள் கையைப் பற்றிக் கொள்கிறான் வாசு.

''நான் உடம்பு சரியில்லாமல் இருந்த போது நீங்கள் வந்திருந்தால், திரும்பப் போகும் போது ஒரு துயர நினைவையே சுமந்து செல்ல நேரிட்டிருக்கும். இப்போது குதூகலமாகக் கழிந்துவிட்ட பொழுதின் இனிமையை ஏந்தி நீங்கள் செல்வீர்கள். இப்போது பிரிவின் வேதனை இருந்தால்கூட, இதன் மாதிரியே வேறுதானே?''

''உண்மைதான் ராஜி! ஆனால் நீ துய ருற்றவேளை துணையின்றி இருந்திருக்கிறாயே?''

''உங்கள் நினைவின் பலம் இருக்கிறதே... நீங்கள் சீக்கிரமே வருவீர்கள் என்ற திருப்தி இருக்கிறதே... அதற்குள் உடம்பு தேறிச் சீரடைய வேண்டுமே, நீங்கள் வரும்போது வாய்க்கு ருசியாகச் சமைத்துப் போடப் போதிய தெம்பு ஏற்பட வேண்டுமே என்று நீங்கள் இருந்து கவனிப்பதை விட, பன் மடங்கு கவனித்துக் கொண்டேனே...''

''இந்த விஷயத்தில் கூடப் பெண் ஒரு புதிர்தான் ராஜி! உன்னை — உன் உணர்வை ஒப்புயர்வற்றதாகக் காண்பது தவிர வேறு எதுவும் சொல்ல முடியவில்லை...!''

ஐந்தே
காசு
போதும்
உங்கள்
குடும்பம்
பெருகாமல்
தடுக்க!






**வேண்டுமென்றபோது மட்டும் பேறு...**

வேண்டுமென்றபோது மட்டுமே இன்று மக்கட்பேற்றை ஏற்படுத்திக் கொள்ளலாம். இதற்கு நிரோத் உதவும்.

**தாய் சேய் இருவரின் தேகநலம்...**

குழந்தைகள் சரியான வளர்ச்சி பெற, முதல் மூன்று நான்கு வருடங்கள் அவர்களுக்கு விசேஷமான பராமரிப்பு தேவை என்று வைத்தியர்கள் கூறுகின்றனர். பேற்றில் இழந்த தேக வலுவை மீண்டும் பெற தாய்க்கும் சிறிது காலம் பிடிக்கும். நிரோத் உபயோகிப்பதனால், அடுத்த பேற்றைச்

70/67

உயர்தர ரப்பரினாலான கருத்தடைச் சாதனம்

**குடும்பக் கட்டுப்பாட்டிற்கு**

15 காசுக்கு 3

**அரசாங்க ஆதரவினால் குறைந்த விலை**

சுலபமாகத் தள்ளிப் போடலாம்.

நிரோத் (காண்டோம்) உயர்தர ரப்பரினாலான கருத்தடைச் சாதனம் ஆண்களுக்கானது. எளிமையான, தீமையற்ற நிரோத் உலகமெங்கும் உபயோகிக்கப்படுகிறது. இதை உபயோகிப்போரின் தேகநலம் பாதிக்கப்படுவதில்லை. நிரோத் எங்கும் கிடைக்கும்

---

**நிரோத், வீட்டுச் சாமான்கள் விற்கும் கடை, மருந்துக் கடை, வெற்றிலைப் பாக்குக் கடை ஆகியவற்றில் கிடைக்கும்.**



# இப்படியும் ஒருத்தியா?

ரமணி ரங்கநாதன்

எட்டு மணிக்கு கிளம்பிவிட்ட காஞ்சிபுரம் பஸ்ஸை நானும் என்னுடன் வந்த என் ஒன்று விட்ட அக்காவும் தவறவிட்டு விட்டதும், இடிந்து போய் உட்கார்ந்து விட்டோம். அதற்கப்புறம் பன்னிரண்டு மணிக்குத்தானே பஸ்?

''ஏன் இப்படி உட்காரணும் கமலா? வா! பக்கத்திலேதான் என் நாத்தனார் பெண் இருக்கா! பார்த்துவிட்டுப் பன்னிரண்டு மணிக்கு வந்துடலாம்!'' என்றாள் அக்கா பட்டு!

வேறு வழியில்லாமல் கிளம்ப வேண்டியதாயிற்று.

அக்காவின் பெண் பானுதான் எத்தனை அடக்கம்? அழகு? எங்கள் இருவரையும் கண்டுவிட்டு வெகு நாட்கள் பழகியவள்போல வரவேற்ற ஆசை என்ன, அடுப்புக் காரியங்களைக் கவனித்துக் கொண்டே அதட்டிக் கொண்டிருந்த அந்த அம்மாளுக்கு (மாமியார் போலிருக்கிறது! அதிகாரத்தைப் பார்த்தாலே புரிந்தது) ஓடி ஓடிப் பதில் சொல்லிக் கொண்டிருந்த பதவிசு என்ன? ''உம்.... எனக்கும் இருக்கிறாளே, ஒரு நாட்டுப்பெண்! பத்துத் தடவை கூப்பிட்டால்தான் காதிலே விழும்! பரீட்சைக்குப் படிக்கிறவளாட்டம் கையிலே எப்போதும் ஒரு கதைப் புத்தகம்! சுறுசுறுப்புன்னு என்ன என்பாள்! இந்த மாதிரி நாட்டுப்பெண் கிடைக்கத் தவம் செய்திருக்கணும்!'' என்னை மீறிப் பெருமூச்சு வந்தது.



காப்பி வந்தது. நாங்கள் குடித்து விட்டு வைத்த காப்பி டம்ளரை உடனே பானு கழுவவில்லையாம். அதற்கு ஒரு முணுமுணுப்பு! துருவிக் கொடுத்த தேங்காயிலே சில்லுச் சில்லாக இருக்கிறதாம். அதற்கு ஒரு சத்தம்! நறுக்கிக் கொடுத்த கத்தரிக்காய்த் துண்டு பெரிதாக இருக்கிறதாம்! சேச்சே! நானும் எத்தனையோ மாமியார்களைப் பார்த்திருக்கிறேன். இப்படியா? அநியாயம்! என்ன விரட்டு விரட்டுகிறாள்?

''சட்னியை இப்படியா அரைக்கிறது?.... சாம்பார் மாதிரி ஆக்கிவிட்டாயே?'' என்று அந்த அம்மாள் பானுவைக் கோபித்த போது எனக்கே அவளை இரண்டு அறை அறையலாமா என்று வந்தது.

ஆனால் அந்தப் பெண் இந்தக் காலத்துப் பெண்ணே இல்லை. ''தெரியாமல் தண்ணியைக் கொஞ்சம் அதிகமா விட்டுட்டேம்மா!'' என்று குரல் அதிகமாக வெளியே கேட்காத மாதிரி எவ்வளவு அடக்கமாகப் பதில் சொன்னாள்!

அதே இடத்தில் என் நாட்டுப்பெண்ணாக இருந்தால் வீடே இரண்டுபட்டிருக்காதா? என்னவோ நான் சொல்லத் தகாத வார்த்தைகளாகக் கொட்டிவிட்ட மாதிரி புலம்பியிருப்பாளே! முதலிலே இப்படிப் பேசத் தைரியம் எனக்கு இருந்தால்தானே வம்பு? எல்லோரும் சாப்பிட்டு முடிப்பதற்குள்....... அப்பப்பா...! போதும். 'சீ! சீ! இருந்தாலும் ஒரு மாமியார் நாட்டுப்பெண்ணை இவ்வளவு தூரம் படுத்தி வைக்கக் கூடாது' என்ற ஆத்திரத்துடன் முன்பின் தெரியாத அந்தப் பெண்ணிடம் அனுதாபம் பொங்கியது. இவ்வளவுக்கும் கைக் குழந்தைக்காரி அந்தப் பெண்! குழந்தைக்கு இரண்டு மாதங்கள் முடிந்திருக்குமோ என்னவோ? பச்சை உடம்புக்காரி என்ற எண்ணமே கொஞ்சம்கூடக் காணுமே, அந்த மாமியார்க்காரியிடம்? என்ன பெண் ஜன்மம் அவள்?

ஒரு வழியாகச் சாப்பாட்டுக்குப் பின் அவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு பஸ் நிலையம் வந்து தயாராக நின்ற பஸ்ஸில் ஏறி அமர்ந்தபின் என்னாலேயே பொறுக்க முடியவில்லை. அவ்வளவு அனுதாபத்தையும் அக்காவிடம் கொட்டினேன்.

''அநியாயமா இருக்கு பட்டு! இந்தப் பெண்ணை இவ மாமியார் இப்படிக் கண்ணிலே விரல் விட்டு ஆட்டி வைக்கிறாளே! பாவமா இருக்கு.''

''யாரைச் சொல்றே கமலா? இந்தப் பெண்ணோட மாமியார் ஊருலேன்னா இருக்கா?'' என்றாள் அக்கா மிகுந்த வியப்புடன்.

''பின்னே! சென்னம்பட்டும் மூக்குக் கண்ணாடியுமா இப்படி அதிகாரம் பண்ணிக் கொண்டு இருந்தாளே அந்த அம்மா யாரு? ஒருவேளை அவளுக்கு நாத்தனாரோ....?'' என்று சந்தேகத்துடன் வினவினேன்.

கடகடவென்று சிரித்தாள் அக்கா.

''நீயொண்ணு. அந்த அம்மாள் சமையல்காரின்னு! கைக் குழந்தையை வெச்சுக்கிட்டு முடியல்லேன்னு இப்போ ஒத்தாசைக்கு வெச்சிண்டிருக்கா! மாமியாரும் இல்லே! நாத்தனாரும் இல்லே! இந்தக் காலத்திலே அவங்களுக்கெல்லாம் எந்தப் பெண் பயந்துக்கிட்டு இருக்கா? வேலைக்காரிக்கும் சமையல்காரிக்கும்தானே நடுங்கிக்கிட்டு இருக்க வேண்டியிருக்கு, பணத்தையும் அள்ளிக் கொடுத்திட்டு!''

பட்டுச் சேலையின் தலைப்பை இழுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டேன்.




★ இக் குறியிட்ட
கடிதம்
ரூ 15/-
பரிசு பெறுகிறது.

கடந்த ஒரு வருடமாகக் கிடைப்பதற்குக் குதிரைக் கொம்பாக இருந்த லிக்கோ இப்போது விலையும் கூட்டப்பட்டு, நடுத்தர, கடைத்தர மக்கள் நினைக்கவும் இயலாத நிலையை அடைந்து விட்டது. கோடிக் கணக்கில் கடன் வாங்கி, கோடிக் கணக்கில் நமது பணத்தையும் போட்டு ஆரம்பிக்கப்பட்ட நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேஷன், லிக்கோ விலையை ஒன்றுக்கு இரு மடங்காக உயர்த்திய பின்னும் கோடிக் கணக்கில் நஷ்டத்தையே காட்டி வருவதைக் கண்டு சோகத்துடன் சிரிக்கத்தான் வேண்டியுள்ளது.

ஆலங்குளம்,
2–11–70 கே. சத்யகீர்த்தி

சென்ற மாதம் நடைபெற்ற ரேடியோ சங்கீத சம்மேளனத்தில் ஒலிபரப்பான கச்சேரிகள் இரவு 12 மணி வரைக்கும் ஒலிபரப்பானது விழித்திருந்து கேட்க முடியாதபடி இருந்தது. வருடத்துக்கு ஒரு முறை ஒலிபரப்பப்படும் ரேடியோ சங்கீத சம்மேளன நிகழ்ச்சிகளை ஏன் மாலை வேளைகளில் ஒலிபரப்பக்கூடாது? பல பேர்களுக்கு அந்நேரம் சௌகரியமாக இருக்குமே!

புதுக்கோட்டை
6–11–70 எம். எஸ். லீலா

தமிழ்நாடு, மைசூர், கேரளா ராஜ்யங்களுக்கிடையே சமீபத்தில் காவிரி நீர் சம்பந்தமாகச் சென்னையில் நடந்த பேச்சு வார்த்தை முறிந்து விட்டது. இதுவரை அநேக சந்தர்ப்பங்களில் பேச்சு வார்த்தைகள் நடந்திருக்கின்றன. ஆனாலும் பலன் கிடையாது.

எந்த ஒரு ராஜ்ய மந்திரியும் தம் பிடியைத் தளர்த்த விரும்பவில்லை. மற்ற ராஜ்யங்களின் கபிட்சத்தையோ அண்டை ராஜ்யங்களின் மக்கள் நலனில் அக்கறையோ இல்லாதவர்களாக இருக்கிறார்கள். தாங்கள் நினைப்பது நடக்க வேண்டும், தங்கள் ராஜ்யம் நன்றாக இருக்க வேண்டும் என்று எண்ணுகிறார்கள்.

நாம் யாவரும் இந்தியப் பிரஜைகள் என்ற எண்ணம் இருப்பதாகவே தெரியவில்லை. நாமே நம்மை அந்நியர்களாகக் கருதும் அவல நிலை இப்போது ஏற்பட்டுள்ளது.

இதற்கெல்லாம் காரணம் நாட்டை மொழி வாரி ராஜ்யங்களாகப் பிரித்ததுதான்.

டாஸ்மியாபுரம்,
5–11–70 வி. ஆர். திருவேங்கடத்தான்

மற்ற மாநிலங்கள் நிறுத்தினால் நமது மாநிலத்திலும் லாட்டரிச் சீட்டு விற்பனை நிறுத்தப்படும் என்று மாண்புமிகு முதல்வர் கூறியதாகச் சமீபத்தில் ஒரு செய்தித் தாளில் கண்டு வியப்படைந்தேன்.

நமது மாநிலத்தில்தான் முதன் முதலாக லாட்டரிச் சீட்டுத் திட்டம் தொடங்கப்பட்டது. என்பதையும் அடுத்தடுத்து மற்ற மாநிலங்கள் தொடங்கின என்பதையும் முதல்வர் மறந்து விட்டாரோ?

நமது மாநிலத்தில் ஏன் முதன் முதல் நிறுத்தி மற்ற மாநிலங்களுக்கு வழிகாட்டலாகாது?

ஆரணி,
2–11–70 என். வி. காந்தன்

★ சென்னை தேனாம்பேட்டை, எல்டாம்ஸ் ரோடும் பெரியார் சாலையும் சந்திக்கும் இடத்தில் நடைபாதையில் மேயரால் அண்ணாவின் 62வது பிறந்த தின நினைவாகக் கொடிக் கம்பம் ஏற்றுவிக்கப் பட்டிருக்கிறது. அம்மாதிரியே கவிஞர் பாரதிதாஸன் சாலையில் உள்ள பூங்காவின் முன்னால் உள்ள நடைபாதையிலும் மேயரால் கொடிக் கம்பம் ஏற்றுவிக்கப்பட்டிருக்கிறது. இவற்றைக் கண்டு நான் ஆச்சரியப்பட்டேன். காரணம் ஒரு புறம் நடைபாதையில் உள்ள கடைகளை மக்களின் சௌகரியத்துக்காக அகற்ற ஏற்பாடு செய்வதும் இதே மேயர்கள்தாம். மறுபுறம் கட்சித் தலைவர்களின் ஞாபகார்த்தமாக நடைபாதைகளில் கொடிக் கம்பங்களை ஏற்றுவதும் இதே மேயர்கள்தாம். மாற்றுக் கட்சியினரும் ஏட்டிக்குப் போட்டியாக ஒரு கொடிக் கம்பத்தை ஏற்றுவித்திருக்கிறார்கள். மூன்றாவதாகவும் ஒரு கொடிக் கம்பம் முளைத்திருக்கிறது. அது எந்தக் கட்சிக்காக என்று தெரியவில்லை. இவை எல்லாம் நடைபாதையில் தான். இம்மாதிரி கொடிக் கம்பங்களினால் மக்களுக்கு எத்தனை அசௌகரியம்!

சென்னை–34
26–10–70 களம்பூர் எஸ். கோபிநாத்

குர்ஜா ரயில் நிலையம் அருகே 26-10-70 அன்று ரயில் விபத்து நேர்ந்ததில் ஒன்பது பேர் இறந்தனர். பலர் காயமுற்றனர். இச் சம்பவம் நடந்தவுடன் ரயில் அமைச்சர் ஜி. எல். நந்தா விபத்துத் தடுப்பு வாரம் அனுஷ்டிக்க வேண்டும் என்றும், விபத்து ஏற்படா வண்ணம் பணிபுரிய வேண்டும் என்றும் ரயில்வேச் சிப்பந்திகளுக்கு அறிக்கை விடுத்தார். ஆனால் அடுத்த சில தினங்களுக்குள் 31–10–70 அன்று பெரம்பூரில் பயங்கரமான முறையில் ரயில் விபத்து ஏற்பட்டது. இச் சம்பவத்தில் பதினாறு பேர்களின் உயிர் பிரிந்தது. பலருக்குக் காயம் ஏற்பட்டது.

விபத்துத் தடுப்பு வாரம் அனுஷ்டிக்க வேண்டும் என்று அமைச்சர் கூறி வாய் மூடுவதற்குள் அடுத்த விபத்து நிகழ்கிறது. ரயில்வே சிப்பந்திகள் அவ்வளவு ஊக்கமின்றிப் பணி செய்கிறார்களா?

சென்னை–11
8–11–70 ஆர். எல். சந்திரசேகரன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
**Managing Editor: T. Sadasivam**

# இதோ, ஒரு தீமையற்ற தலைவலி மாத்திரை!



# அவேதன்®

அற்புத 'எபெப்' அடங்கியது.

(என்-அஸிடில்-பி-எமினோஃபினால்)



தலைவலி மாத்திரை ஏதாவது தீங்கு விளைவிக்குமோ என்கிற பயத்தால், நாம் எத்தனையோ தடவை தலைவலியைப் பொறுத்துக் கொண்டு அவதிப்படுகிறோம்.

ஆனால் அப்படி அவதிப்பட வேண்டாம். அவேதன் தீமையில்லாமல் தலைவலியைப் போக்குகிறது. ஏனெனில், அவேதனில் அற்புத 'எபெப்' அடங்கியுள்ளது. அவேதன் சாப்பிட்ட பின் எவ்வித துன்பகரமான பின் விளைவுகளும் ஏற்படாது; துரிதமான நிச்சய நிவாரணம் கிடைக்கும்.

எனவே, தீமையற்ற முறையில் தலைவலியைப் போக்குங்கள், ஜலதோஷம், ஃப்ளூ மற்றும் இதர வலிகளையும் நோவுகளையும் கூடத்தான்! 'எபெப்' அடங்கிய அவேதன் சாப்பிடுங்கள்.

**2 டேப்லெட்டுகள்: 15 பைசா.**

அவேதன்—அற்புத 'எபெப்' அடங்கியது. தலைவலி, ஜலதோஷம், மற்றும் ஃப்ளூவிலிருந்து தீமையற்ற நிச்சய நிவாரணம் அளிக்கிறது





SQUIBB

**SARABHAI CHEMICALS**

® இ. ஆர். ஸ்க்விப் அண்டு ஸன்ஸ் இன்கார்ப்பரேடெட்டின் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்கைக் குறிக்கிறது. காரசந்த் ப்ரேம்சந்த் பிரைவேட் லிமிடெட் இதை உபயோகிக்க உரிமை பெற்றுள்ளனர்.

Shilpi HPMA-37/70 Tam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon





S. 162